உ
திருவருள் துணை.

# விக்ரக ஆராதனையின் விளக்கம்





திருவருள் தவநெறி

## மன்ற வெளியீடு

உ

திருவருள் துணை.

# திருவருள் தவநெறி மன்றம்,

(பதிவு செய்யப்பெற்றது)

70, தெற்கு ஆவணி மூலவீதி: மதுரை.

---

நிரந்தரத் தலைவர்:

மதுரை ஆதீனம் 291-ஆவது குருமகா சந்நிதானப்
**ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர ஸ்ரீ ஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள்.**

நிரந்தர அமைச்சர்கள்:

1. அருள் மொழியரசு, முத்தமிழ் வள்ளல்,
**திருமுருக. கிருபானந்தவாரியவர்கள்.**
2 மகா வித்வான், **ஆறுமுக நாவலரவர்கள்.**

நிரந்தர பொருள் காப்பாளர்:

**ஜெ. மு. குருநமசிவாயம் அவர்கள்.**

மக்கள் தெய்வ நம்பிக்கையோடு வாழ்ந்து இம்மை மறுமைப் பயன்களை அடையுமாறு பணிபுரிய, மதுரை ஆதீனம் குருமகா சந்நிதானம் அவர்களை, பூர்வாச்சிரமத்தில் தலைவராகக் கொண்டு திரு. கிருபானந்தவாரி அவர்களால், 30-11-51ல் (கர, கார்த்திகை, 14உ) 'ஒளிநெறி மன்றம்' என்ற சபை நிறுவப்பெற்று வளர்ந்து வந்தது.

அம்மன்றமே, 30—3—53ல் 'திருவருள் தவநெறி மன்றம்' எனப் பதிவு செய்யப் பெற்றது. மன்றப் பணிகள் செவ்வனே நடைபெறத் தலைவர் அவர்கள் ரூ 50,000/- நன்கொடை வழங்கியுள்ளார்கள்.

**கிளை மன்றம் அமைக்க என்ன செய்யவேண்டும்?**

ஆத்திக மனப்பான்மை உள்ளோர் குறைந்தது ஏழு பேர்கள் கட்டாயம் தேவை.

[பின் அட்டை உட்பக்கம் பார்க்க.]

உ
திருவருள் துணை.

# விக்ரக ஆராதனையின் விளக்கம்





இந்நூல் ஆசிரியர்:
மதுரை, திருஞானசம்பந்த சுவாமிகள் ஆதினம்
291-ஆவது குரு மகா சந்நிதானம்
திருவருள் தவயோக ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர
ஸ்ரீ ஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள்

நிறுவிய தலைவர்:
திருவருள் தொண்டர் சபை, குலசேகரன்பட்டினம்.
திருவருள் உயர்நிலைப் பள்ளி, குலசேகரன்பட்டினம்.
திருவருள் தவநெறி மன்றம், மதுரை.
இந்து தர்மப் பிரசார சங்கம், சென்னை.




பதிப்புரிமை:
**திருவருள் தவநெறி மன்றம்,**
**70, தெற்கு ஆவணிமூல வீதி,**
**மதுரை.**

விகாரி௵ ஐப்பசிமீ
1959 November

5-A

உ

முருகா.

# முன்னுரை.

இறைவன் எல்லாப் பொருள்களிலும் எங்கும் பொதுவாக இருக்கின்றான். விதிப்படி மந்திரமூலம் அமைத்த திருவுருவங்களிலும், அருள் ஞானிகளிடத்திலும் சிறப்பாகத் தங்கியிருக்கின்றான்.

ஆதலால் திருவுருவங்களை வழிபடுவது முத்திநலம் பெறுவதற்கு எளிய சாதனையாகும்.

"புண்ணியம் செய்வார்க்குப் பூவுண்டு நீர்உண்டு
அண்ணல் அதுகண்டு அருள்புரியா நிற்கும்
எண்ணிலி பாவிகள் எம்இறை ஈசனை
நண்ணறி யாமல் நழுவுகின்றாரே."

என்கின்றார் திருமூலர். ஆதலின் இறைவனை மலரிட்டு வழிபட்டால் இகபர நலன்கள் எளிதில் கைகூடும்

"திங்களங்கண்ணிப் புத்தேள் சேவடிக் கமலம்உண்டு
கொங்கவிழ் மலரும்உண்டு குளிர்தரு புனலும்உண்டு
தங்கும் அஞ்செழுத்தும்உண்டு தவள வெண்ணீறும் [உண்டு
வெங்கலிக்குஉடைவதென்னே வெளிற்றறி வுடை [யரே போல்"

என்று கூர்மபுராணங் கூறுகின்றது.

எனவே திருவுருவங்களின் நுட்ப திட்பங்களையும், வழிபடுவதன் இன்றியமையாத கடப்பாட்டையும், அதன் வழிவகைகளையும், அதனால் பெறும் பேற்றினையும் நாம் ஒவ்வொருவரும் உணர்தல் சாலவும் அவசியமாகும்

நமது திருவருள் தவநெறி மன்றத்தின் நிரந்தரத்தலைவரும், மதுரை, திருஞானசம்பந்த சுவாமிகள் ஆதீனத்து, 291ஆவது பட்டத்தில் எழுந்தருளியுள்ள ஞான பீடாதிபதியுமாகிய, திருப்பெருந்திரு திருவருள் தவயோக சோமசுந்தர ஸ்ரீ ஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள், தமிழகம் உய்யும் பொருட்டு இந்த அரிய "விக்ரக ஆராதனையின் விளக்கம்" என்ற நூலை எழுதியருளினார்கள்.

மதுரை, திருப்புகழ் சபைத்தலைவர், சிறந்த தருமகுணசீலர், உயர்திரு எஸ். எஸ். சுப்பையா பிள்ளையவர்கள் இத்திவ்விய நூலை அச்சிட அன்புடன் உதவி புரிந்தனர். இத்தகைய ஞானநூல்கள் பல வெளிவருதல் வேண்டும்.

'கிரகம்' என்றால் வீடு அல்லது இருப்பிடம். "வி" என்றால் மேன்மை. மேன்மையான இருப்பிடம் "விக்கிரகம்". இறைவனது திருவருள் சிறப்பாக விளங்கித் தோன்றுகின்ற உயர்ந்த இடம் விக்கிரகம் எனப்படும்.

ஆதலின் இத்திருவருள் நூல் குருவருளால் வெளியாகின்றது. இதனை ஏனோரும் ஓதி வானோரும் போற்றும் உயர்நிலையுறுமாறு வேண்டுகின்றேன்.

அன்பன்

*கிருபானந்தவாரி,*
நிரந்தரச் செயலாளர்,
திருவருள் தவநெறி மன்றம், மதுரை.



மதுரை, திருஞானசம்பந்த சுவாமிகள் ஆதீனம்
291 ஆவது குரு மகா சந்நிதானம்
திருவருள் தவயோக ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர
ஸ்ரீ ஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள்

திருவருள் துணை.

# பொருளடக்கம்.

---

திருவருள் துணை.

# விக்ரக ஆராதனையின் விளக்கம்.

---

## 1. இந்து மதத் தலைவர்களின் கடமை.

இந்துக்கள் தொன்று தொட்டு செய்து வரும் விக்ரக ஆராதனை பற்றிய உண்மைகளும், விளக்கங்களும், இந்து சமயத்திலுள்ள பலருக்குமே தெரியாமல் இருந்து வருகின்றன. இருந்தாலும், "மூத்தோர் சொல் வார்த்தை அமிர்தம்" என்ற பழமொழிக்கு இணங்க, பாமரர் பலரும் மாணவ மாணவிகளும், முன்னுள்ள பழக்கத்தை அனுசரித்து நடந்து வந்திருக்கிறார்கள். படிப்பதனால் ஏற்படும் பயனை அறிந்து கொள்ள முடியாத பருவத்திலேயே அன்றும், இன்றும், மாணவர்கள் பாடங்களைப் படித்து வருகிறார்கள். வியாதிக்காகச் சாப்பிடும் மருந்துகளின் குணாதிசயங்களை ஒரு சிறிதும் அறியாமலேயே மருந்துகளைச் சாப்பிடுகிறார்கள். ஊசி குத்திக் கொள்ளுகிறார்கள். உணவாதிகளின் குணங்களைத் தேர்ந்து கொள்ளாமலேயே, முன்னோர் உண்டவற்றையே உண்டு வருகிறார்கள். ஆனால் தொன்று தொட்டுக் கையாண்டு வருகின்ற விக்ரக ஆராதனையைப் பற்றி, இன்றைய மாணவர்கள் கேள்விகள் கேட்கிறார்கள் என்றால், அவர்களை நாம் குறை கூறுவதில் பயனில்லை. அவர்களை அவ்வாறு கேட்கும்படி பிறமதத்தினர் தூண்டிவிடும்பொழுது, அதற்குத் தக்க பதில் சொல்ல முடியாத மாணவ மாணவிகள், அதைப் பெரியவர்களிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளவும், அவ்வாறு தெரிந்து கொண்டதை, விக்ரக ஆராதனையைப் பெரிதும் ஆட்சேபிக்கிற பிறமதத்தினருக்குச் சொல்லி, அவர்கள்

ஒத்துக் கொள்ளுமாறு செய்ய விரும்புவதும் வாலிபர்களது இயல்பே. அதை நாம் வரவேற்று, அவர்கள் விளங்கிக் கொள்ளுகிற முறையில் விளக்கம் கொடுத்து உதவ வேண்டியது இந்து மதத் தலைவர்களின் தலையாய கடமையாகும்.

## 2. ஒரு கருத்தையோ ஒரு பொருளையோ அறிவிப்பது சொல்.

பொதுவாக, பகுத்தறிவு பெற்ற எந்த மனிதனும் தனக்குத் தெரியாத வேறு மொழியில் பேசுகின்ற ஒரு சமூகத்தைப் பார்த்து, அந்தச் சமூகத்தினருக்கு, ஒருவர் கருத்தை மற்றவருக்கு உணர்த்தத் தெரியாது என்றோ, உணர்த்த இயலாது என்றோ, அவர்கள் பேசுகின்ற பேச்சு பொருளற்றது என்றோ, உணர்ச்சி ஊட்டக் கூடிய சீரிய கருத்தில்லாதது என்றோ, அவர்களுக்குப் பேசும் ஆற்றலும் அதற்குரிய அறிவும் கிடையாதென்றோ சொல்லத் துணிய மாட்டான். அப்படி எவனுவது சொல்லத் துணிந்தால், அவனை அறிவுடையவன் என்று யாரும் கருத முடியாதல்லவா? மலைகளில் வாழும் "மலைப் பழிஞர்" ஒருவரோடு ஒருவரும், காடுகளில் வசிக்கின்ற காட்டு மனிதர்கள் ஒருவரோடு ஒருவரும் பேசி, ஒருவர் கருதுகின்ற கருத்தைப் பிறரும் அறிந்து கொள்ளும்படி செய்து வருகிறார்கள் என்பதை யாரும் மறுக்க முடியாது.

ஒருவன் கண்ட ஒரு பொருளை மற்றவனும் உணரும்படி உணர்த்த வேண்டுமானால் ஒன்று அப்பொருளையே அவனுக்குக் காட்டி உணர்த்த வேண்டும். அல்லது அப்பொருளைக் குறிக்கின்ற ஒரு சொல்லால் சொல்லி உணர்த்த வேண்டும். அவ்வாறு சொல்லால் உணர்த்துகின்ற பொருளை அதனைக் கேட்கின்றவனும் முன்னரே அறிந்திருத்தல் வேண்டும்.

உதாரணமாக, காடுகளில் திரிகின்ற முயல்களைக் கண்ட ஒருவன், மற்றவனுக்கு இன்ன இடத்தில் ஒரு பெரிய முயல் கூட்டம் இருக்கிறது என்று முயலைக் குறிக்கின்ற சொல்லால் எந்த மொழியில் சொன்னாலும், முயலைப் பார்த்திருக்கின்ற ஒருவனுக்கு உடனே அந்தச் சொல்லினது பொருள் புலனாகிவிடும். முயலே தெரியாத ஒருவனுக்கு எந்த பாஷையில் என்னதான் கூப்பாடு போட்டாலும் ஒன்றும் புலனாகாது. அவனுக்கு அந்தச் சொல்லினுடைய பொருள் புலனாக வேண்டுமானால் அந்தப் பொருளையே அவன் காணுமாறு செய்ய வேண்டும். அல்லது அதன் உருவத்தைச் சிலையாகச் செய்து காட்ட வேண்டும். அதுவும் முடியா விட்டால் ஒரு படத்திலாவது அதை எழுதிக் காட்ட வேண்டும்.

3. சொல்லின் வரி வடிவமே எழுத்தாகின்றது.

ஒவ்வொரு சொல்லும், எம் மொழியாளருக்கும் ஒவ்வொரு கருத்தையோ அல்லது ஒவ்வொரு பொருளையோ குறித்ததாகவே இருக்கும். இனி, அந்தச் சொல்லை நேரில் கேட்க முடியாதவர்களும், பின் சந்ததியார்களும் அந்தச் சொல்லின் பொருளை விளங்கிக் கொள்ள வேண்டுமானால், அந்தச் சொல் ஏதாவது ஒரு வரி வடிவத்தில் எழுதப் பெறல் வேண்டும். தனக்குத் தெரியாத மொழியில் எழுதப் பெற்றிருக்கும் ஒரு வசனத்தையோ, பாட்டையோ கண்ணுற்ற ஒருவன், அது அறிவில்லாத முட்டாள் ஒருவனால் கிறுக்கி வைக்கப் பெற்றிருக்கிறது என்று சொல்வானானால், அப்படிச் சொல்லுகிறவனே அறிவில்லாத முட்டாள், அவனே கிறுக்கன் என்று அறிவுடையோர் சொல்லத் தயங்க மாட்டார்கள்.

## 4. மதிப்பிற்கும், மரியாதைக்கும் உரிய படமும், உருவச் சிலையும்.

இம் மண்ணுலகில் வாழ்ந்த ஒரு முனிவர், மகரிஷி, ஞானி இவர்களது படத்தையோ, உருவச் சிலையையோ, பின் சந்ததியார் உணர்ந்து கொள்ளும் பொருட்டு, அறிவுடைய மக்கள் செய்து வைத்திருந்தால், அந்தந்த சான்றோரது குணாதிசயங்களையும், அற்புதச் செயல்களையும் கேட்டறிந்த, அல்லது படித்தறிந்த, அல்லது நேரில் தெரிந்த அவர்கள் மட்டுமே அதற்குக் கொடுக்க வேண்டிய மரியாதைகளையும், மதிப்பையும் கொடுத்து வணங்குவர். அவ்வாறு வணங்குகிற பெரு மக்களைப் பார்த்து, அந்தச் சிலையின், அல்லது உருவத்தின் அருமை பெருமைகளைத் தெரியாத ஒரு கூட்டத்தினர் கேலியும், நையாண்டியும் செய்தால் அக் கூட்டத்தினரைப் புத்திசாலிகள், பகுத்தறிவு பெற்றவர்கள் என்று அறிவுடைய எவரும் சொல்ல மாட்டார்கள். அவ்வாறு வணங்குவது முட்டாள்தனம் என்பார்களானால் வணங்குகிறவர்கள் முட்டாள்கள் அல்ல; அவர்களை முட்டாள்கள் என்று சொல்லுகிறவர்களே முழு முட்டாள்கள் ஆவார்கள் என்பதையும் யாரும் மறுக்க முடியாது.

இவ்வுலகத்திலுள்ள இவற்றிற்கே இவ்விதமான பேச்சுக்களும், நிகழ்ச்சிகளும் ஏற்படுமானால் சாதாரண மக்கள் காணமுடியாத, கைலாசத்திலுள்ள சிவ பரம்பொருள் ஒவ்வொரு காரணத்திற்காக எடுத்துக் கொண்ட இருபத்தைந்து அருள் வடிவங்களையும், ஸ்ரீவைகுண்டத்திலுள்ள மகா விஷ்ணுவின் பத்துத் திரு அவதாரங்களையும் காணும் பேறு பெற்ற அருளாளர்கள், அடியார்கள், நாயன்மார்கள், ஆழ்வாராதிகள், பிறர் காணுமாறும், கண்டு உய்யுமாறும், பாடி அமைத்திருக்கின்ற தெய்வீக விக்ரகங்களைப் பற்றி, அவற்றின் உண்மையான

வரலாறுகளையும், மகிமைகளையும் ஒரு சிறிதும் தெரியாதவர்கள், ஏதும் குளறுவதும், உளறுவதும், அவர்களுடைய அறியாமையையே வெளிப்படுத்துகின்ற செயலாகும் என்பதை யாரும் மறுக்க முடியாது.

5. கடிதமும், படமும் அன்பர்களை உணர்ச்சி வயப் படுத்துமானால் கடவுளின் உருவப் படங்களும், சிலைகளும் ஏன் பக்தர்களைப் பரவசப்படுத்தாது?

தனக்கு அன்புடைய ஒரு ஆணோ, பெண்ணோ எழுதின கடிதத்தைப் படித்துப் பார்த்த மாத்திரத்தில், எழுதினவர்களின் குணாதிசயங்களும், அன்பின் திறமும், மனதிற்கு வந்து உணர்ச்சி வயப்பட்டு கண்ணீர் வடிக்கின்றதைக் காண்கின்றோம். காதலனும், காதலியும் ஒருவர் படத்தை ஒருவர் பார்த்துக் கொண்டு, உணர்ச்சி வயப்படுகின்றதைக் காண்கின்றோம். மையினால் எழுதின எழுத்தோ, தாளில் அமைந்த படமோ, அவ்வுணர்ச்சியைக் கொடுக்கவில்லை என்பதையும் அதற்கு உள்ளீடாக நிற்கும் காரணகர்த்தாவான ஒருவரின் சீலமும், உறவும் அதனால் ஏற்பட்ட மாறாத அன்புமே, அவ்வுணர்ச்சியைத் தட்டி எழுப்பிக் கொடுத்தது என்பதையும் யாரும் மறுக்க முடியாதல்லவா? அது போல கடவுளின் உருவப் படங்களும், உருவச் சிலைகளும் அந்தந்த உருவம் தாங்கி, ஆண்டவன் செய்திருக்கின்ற துஷ்ட நிக்ரகமும், சிஷ்ட பரிபாலனமும், பேராற்றல் உடைமையும், பிழைகளைப் பொறுக்கின்ற பேரருள் உடைமையும் பக்தர்களை நினைந்து உருகும்படி செய்து, அவர்களைப் பரவசப் படுத்தி, ஆனந்தத்தில் திளைக்கச் செய்கின்றன என்பதை யாரும் மறுக்கவோ, பகுத்தறிவுக்கு ஒவ்வாததென்று கருதவோ முடியாதல்லவா?

## 6. கிறிஸ்தவருடைய வேதப் புத்தகத்தில் கடவுளின் உருவத்தைப் பற்றிக் கூறியிருப்பது.

கிறிஸ்தவர்கள் வேதப் புத்தகத்தின் பழைய ஏற்பாட்டின் முதல் அத்தியாயமாகிய ஆதியாகமத்தின் 26.27 ஆவது பாராக்களில் "தேவன் தம்முடைய சாயலாகவும், தமது ரூபத்தின்படியேயும், மனுஷனைச் சிருஷ்டித்தார் என்று கூறியிருப்பதிலிருந்து பரலோகத்திலிருக்கிற தேவன், மனிதருடைய சாயலிலும், ரூபத்திலும் இருக்கிறார், என்பதில் பிடிவாதம் என்ற வியாதி இல்லாத எவருக்கும் எள்ளளவாவது சந்தேகம் இருக்க முடியாது. இது பழைய ஏற்பாட்டிலுள்ளது என்றும், எங்களுக்குப் புதிய ஏற்பாடு தான் அனுஷ்டானத்திலுள்ளது என்றும் யாராவது சொல்ல முற்படுவாராகுல், அவரிடம் தாம் பின்பற்றி வருகிற கிறிஸ்து மதத்திலுள்ள 10 கற்பனைகளும் பழைய ஏற்பாட்டில் உள்ளவையா? புதிய ஏற்பாட்டிலுள்ளவையா? என்று கேட்டு அவர் வெட்கப்படும்படியாகச் செய்ய வேண்டும். அத்துடன் புதிய ஏற்பாட்டிலிருந்து கீழே கொடுக்கப் பெற்றிருக்கிற வசனங்களையும் கவனிக்கச் செய்ய வேண்டும்:—

"ஏலி ஏலி லாமா சபக்தானி" என்று மிகுந்த சப்தமிட்டுத் தன் தேவனைக் கூப்பிட்டார். அதற்கு "என் தேவனே என்தேவனே ஏன் என்னைக் கைவிட்டீர்" என்று அர்த்தம். மத்தேயு (27—46) மாற்கு (15—34). மேலும் மாற்கு அத்தியாயம் 16, பாரா 19ல், "இவ்விதமாய்க் கர்த்தர் அவர்களுடனே பேசின பின்பு பரலோகத்துக்கு எடுத்துக் கொள்ளப்பட்டு, தேவனுடைய வலது கரத்தில் உட்கார்ந்தார்" "Sat on the Right Hand of God" என்று தான் குறிப்பிடப் பெற்றிருக்கிறது. தமிழில் வலது பாரிசத்தில் என்று எழுதியிருக்கிறுர்கள். கை அல்லது வலது கரம் என்ற உடனேயே, கடவுளுக்கு உருவம்வந்து

விடுகிறது என்பதற்காக அவ்வாறு எழுதப்பெற்றதோ என்னவோ தெரியவில்லை. ஆனால் ஆங்கிலத்தில் கையில் என்றுதான் இருக்கிறது. மேலும் வலது பாரிசம் என்று கொண்டாலும், ஒரு உருவம் இல்லாமல் வலது பாரிசம் இடது பாரிசம் எவ்வாறு ஏற்படக்கூடும்? வலது கை இருந்தால் இடதுகையும் இருத்தல் வேண்டும். நமக்கே இரண்டு கைகள் கொடுத்திருக்கும் அவர் ஒற்றைக் கையராக இருக்க முடியாது. அவர் எப்படி இருக்கிறார்? அவருக்கு எத்தனை கைகள்? தலையிலும், உடலிலும், கைகளிலும்,கால்களிலும் என்ன என்னஅணிந்திருக்கிறார்? என்று இந்துக்களைத் தவிர வேறுயாரும் கண்டதும் இல்லை. சொன்னதும் இல்லை. தான் கண்டிருந்தால்தானே பிறருக்கு சொல்ல முடியும்.?
அருபி

## 7. இஸ்லாமிய திருக்குரானில் கடவுளின் உருவத்தைப் பற்றிக் கூறியிருப்பது.

திருக்குரானில் "அல்லாஹுத்தாலா வெளிப்படுத்திய வேதத்தில் எதையாவது ஒளிக்கின்றவர்களும், அதனால் சிறு லாபம் அடைகின்றவர்களும், நெருப்பைத் தவிர வேறு எதையும் உண்ணுவதில்லை. நியாயத் தீர்ப்பு நாளன்று, அல்லாஹுத்தாலாவிற்குப் பயந்து நடந்து கொள்வதோடு, ஒரு நாள் அவரை நீ சந்திப்பாய் என்றும் தெரிந்துகொள்" என்றும் கூறுகிறது. பரிசுத்த குர்ஆன் (சூ 59 ரு 3) "வான மண்டலங்களிலும், பூமியிலும் உள்ளவர்கள் ஆண்டவனை மகிமைப் படுத்தியும் வாழ்த்தியும் வருகின்றனர். அவனே சர்வ வல்லவனாகவும், சர்வ ஞானியாகவும் இருக்கிறான்." என்று கூறுகிறது. (சூ 2 ரு 23—25) அவன் பிரார்த்திப் பவர்களின் பிரார்த்தனையைக் கேட்டு அங்கீகரித்து உத்தரங் கொடுப் பவன். இறைவன் பாதையில், முற்றாய் தன் வாழ்க்கையை அர்ப்பணம் செய்து, அவனுக்கே முற்ற முற்ற அடிபணிந்து,

திருமறையின் முக்கிய அத்தியாயமான "பாத்திஹா" என்ற பிரார்த்தனையை, இடைவிடாது ஓதிவருகிற அடியான், "தன் திருமுகத்தைக் காண்கிறான்" என்று கூறுகிறது. காணக்கூடிய திருமுகம் உண்டு என்றால் ஆண்டவனுக்கு உருவம் உண்டு என்பது பெறப்படுகிறதல்லவா?

இனி இந்த உண்மைகளை அடிப்படையாக வைத்துக் கொண்டு, பரம் பொருளாகிய கடவுளுக்குப் பலவிதமான உருவ நிலைகள் உண்டு என்றும், அவ்வுருவங்கள் அவராலேயே ஒவ்வொரு காரியத்திற்காகவும் எடுத்துக் கொள்ளப் பெற்றனவே தவிர, மனிதர்களின் புத்தியினாலோ, மனோ சிருஷ்டியினாலோ ஏற்படுத்திக் கொள்ளப் பெற்றன அல்ல என்பதையும் தெரிந்து கொள்ள வேண்டும்.

## 8. இந்து மதத்தின் நான்கு மார்க்கங்களும், கடவுளுக்கு உருவம் உண்டு என்பதும்.

இந்து மதத்தில் பிறவியற்ற நிலையை அடைய சரியை, கிரியை, யோகம், ஞானம், என்ற நான்கு மார்க்கங்கள் உண்டு. அவற்றை அனுசரிப்பவர்களில் சரியையாளர்கள் சரீர உழைப்பினால் வழிபாடும் தொண்டும் செய்து, பிறவியற்ற நிலை எய்தி, கடவுள் இருக்கும் சிவலோகத்தில் சாலோகப் பதவி பெற்று, அங்கு சரீரத் தொண்டு செய்து கொண்டிருப்பார்கள் என்றும், கிரியையாளர்கள் சரீர உழைப்பினாலும், மனத்தின் ஈடுபாட்டாலும், வழிபாடும் தொண்டும் செய்து, பிறவியற்ற நிலையெய்தி, கடவுள் இருக்கும் சிவலோகத்தில் சாமீபப் பதவி பெற்று, சரீரத்தினாலும் மனத்தினாலும், கடவுளின் சமீபத்திலிருந்து தொண்டு செய்து கொண்டு மகிழ்ந்திருப்பார்கள் என்றும், இனி யோக சித்தியாளர், மனத்தினாலேயே யோக நிட்டை கைவரப் பெற்று பிறவியற்ற நிலை எய்தி கடவுள் இருக்கும் சிவலோகத்தில் சாரூபப் பதவி பெற்று, கடவுளது

உருவத்தையே பெற்று இன்புற்று இருப்பார்கள் என்றும், இறுதியாக ஞானம் கைவரப் பெற்றவர்கள், எல்லாவற்றி லும் கடவுளைக் கண்டு, பிறவியற்ற நிலையெய்தி சாயுச்சிய பதவி பெற்று, நித்தியானந்தப் பெரு வாழ்வு பெற்றுத் திகழ்வார்கள் என்றும், கூறப் பெறுகின்றது. ஆகவே சிவலோகத்தில் நமக்கு உடல் கொடுத்து, உலகத்தைப் படைத்து, அவற்றின் உற்பத்திக்கும் நமக்கும், அவசிய மான தண்ணீரையும் காற்றையும் நெருப்பையும், தந்து உபகரிக்கின்ற ஒரு கடவுள், உருவத்தோடு இருக்கிறார் என்பதையும், அவருடைய ஆட்சியில்தான் விண்ணுலகும் மண்ணுலகும், பிற அண்டங்களும் இருந்து வருகின்றன என்பதையும் இந்துக்கள் ஒப்புக் கொள்ளுகிறார்கள்.

## 9. அருபியான ஆண்டவன் தான் நினைந்த அருள் வடிவத்தைத் தானே எடுத்துக் கொள்வதின் விளக்கம்.

மேலும் இந்து மதத்தில் ஜீவராசிகள் அனைத்திற்கும், ஒவ்வொரு உருவத்தைக் கொடுக்கின்ற கடவுள், அங்கு இங்கு எனாதபடி எங்கும் பிரகாசமாய் ஆனந்த பூர்த்தி யாகி அருளொடு நிறைந்து தன்னருள் வெளிக்குள்ளே அகிலாண்ட கோடியெல்லாம் தங்கும்படிக்கு இச்சை வைத்து, உயிர்க்குயிராய், மனம் வாக்கினுக்கெட்டாமல் நிற் கும் அருபியாக இருந்தாலும், தான் நினைந்த அருள் வடிவத் தைத் தானே எடுத்து, அடியார்களுக்குக் காட்சிகொடுத்து அருள் புரிந்து வந்திருக்கிறார் என்றும், அப்படி அவர் எடுத்துக் கொண்ட அருள் வடிவங்களில் இன்றும், சிவ லோகத்திலும், வைகுண்டத்திலும் அவரது அருளுக்குப் பாத்திரமான பக்தகோடிகளுக்கும் இவ்வுலகத்திலுள்ள அனுபூதிமான்களுக்கும், காட்சி கொடுத்துக் கொண்டு வருகிறார் என்றும், இவ்வுலகத்திலுள்ள அனுபூதிமான்கள் எப்பொழுதும் சொல்லி வந்திருக்கிறார்கள். அந்தத் திரு

வுருவங்களெல்லாம் அருள் உருவங்கள். மனிதர்களால் உண்டாக்கப் பெற்றவை அல்ல. அவை ஓவியங்களிலும் காவியங்களிலும் திட்டப் பெற்று, விக்ரகங்களாக அமைக்கப் பெற்று, அதற்குரிய மூர்த்தியை அதில் எழுந்தருளியிருக்கும்படி வேண்டப்பெற்று அதன்பின் வழிபடப் பெற்று வருகின்றன.

## 10. நமது விண்ணுலக வாழ்வும் மண்ணுலக வாழ்வும்

உயிருக்குயிராய் இருக்கின்றார் என்று சொல்லப் பெறுகின்ற பரம்பொருள், மேலுலகத்தில் பலவித உருவம் தாங்கியிருந்து நம்மை ஆட்சி புரிந்து வருகிறார் என்று சொல்லுகிறீர்களே! அது எவ்வாறு பொருந்தும்? என்று சிலர் கேட்கலாம். அவர்களெல்லாம் நாம் இப்பூலோகத்தில் பிறக்குமுன் எங்கேயிருந்தோம்; இம் மண்ணுலகை நீத்தபின் எங்கே செல்லப் போகிறோம், நாம் நிரந்தரமாகவும், சுதந்திரமாகவும் வாழ்ந்து வந்த இடம் விண்ணுலகமே தவிர மண்ணுலகம் இல்லை என்பதை அறியாது அவ்வாறு கேட்கின்றனர், அவர்களுக்கு மண்ணுலகில் நடைபெறும் ஒரு உதாரணத்தால் அதைத் தெளிவுபடுத்தி விடலாம்.

## 11. சிறைச் சாலையில் காணப்படும் வேற்றுமைகள் ஒரு நியாயத் தீர்ப்பினாலேயே ஏற்பட்டவை.

ஒரு மாவட்டத்திலுள்ள சிறைச்சாலையில் பல கைதிகள், பல தரப்பட்ட தண்டனைக்கு உள்ளாகி, பல ஊர்களிலிருந்து, நியாதிபதிகள் செய்த தீர்ப்புகளின் பிரகாரம் தண்டனை அனுபவித்துக் கொண்டிருக்கிறார்கள் அல்லவா? அவர்களுக்குள் உணவுகளில் வேற்றுமையும், அங்கு செய்ய வேண்டிய தொழிற்களில் வேற்றுமையும், அங்கு தங்கியிருக்க வேண்டிய நாட்களில் வேற்றுமையும், ஒரே வகுப்பில் அநுபவசாலிகளுக்கும், புதிய கைதிகளுக்

கும் உள்ள தராதர வேற்றுமையும் உண்டு என்பதும், யாவரும் அறிந்ததே. அவர்கள் விரும்பிய ஆகாரத்தைச் சாப்பிடவோ, விரும்பிய வேலையைச் செய்யவோ, கொடுத்தவேலையைச் செய்யாதிருக்கவோ, சிறைச்சாலையை விட்டு குறித்த நாளுக்கு முன்பே வெளியே போகவோ, அல்லது எந்த நாளும் அங்கேயே நிரந்தரமாக வாழவோ முடியாது என்பதும் யாவரும் அறிந்ததே.

## 12. அவ்வித தீர்ப்புக்களுக்கு அவரவர்கள் செய்த செயல்களே காரணம்:-

அவர்களுக்கு எல்லோரையும் போல் மனம் போன போக்குப்படி நடக்க வேண்டுமென்ற விருப்பம் இருந்தாலும், அவர்களுடைய சுதந்திரம், அவர்கள் இஷ்டத்தில் இல்லாமல், அவர்களை ஆண்டு வருகின்ற அரசாங்கத்தின் அதிகாரம் பெற்ற ஒரு நியாதிபதியின் நியாயத் தீர்ப்புக்கு உட்பட்டுத்தான் தொழிற்பட வேண்டிய தாயிருக்கிறது என்பது யாவரும் அறிந்ததே. சிறைச்சாலையில் ஒவ்வொருவர் ஒவ்வொரு நிலையில் வாழும் படி ஏற்பட்டது, நீதி செலுத்தி ஆண்டு வருகிற அரசாங்கத்தாரால், அவரவர் செய்த செயலைப் பொருத்து வழங்கப்பட்ட தீர்ப்பைப் பொருத்தே யாகும். காரணமில்லாமல் யார்மீதும் கோபம் கொண்டோ, பழிவாங்க வேண்டும் என்ற எண்ணம் கொண்டோ, நீதியுள்ள அரசாங்கம் யாருக்கும் தீர்ப்புக் கொடுப்பதில்லை, என்பதையும் எல்லோரும் ஒப்புக் கொள்வர்.

## 13. சிறைச் சாலையில் வாழுகின்றவர்கள் அதற்கு முன் எவ்விதக் கட்டுப்பாடுமின்றி சிறைச்சாலைக்கு வெளியே வாழ்ந்திருந்தவர்களே;-

அவ்வாறு சிறைச்சாலையில் பலதரப்பட்ட தீர்ப்புக் களுக்குஉள்ளாகி இருப்பவர்கள் தங்களது விருப்பம்போல்

சுதந்திரமாகவும், நிரந்தரமாகவும் வாழ்ந்து வந்த சொந்த ஊர்கள் சிறைச் சாலைக்கு வெளியே உள்ளனவே தவிர, சிறைச் சாலைக்கு உள்ளேயே இருக்க முடியாது. என்பது யாவரும் அறிந்ததே. இனி அவ்வாறு சுதந்திரமாக வாழ்ந்து வந்தவர்கள் செய்த குற்றங்களை கண்காணித்து, நியாயவிசாரணை செய்து, தீர்ப்புக் கொடுத்து, அவர்களை மேலும் குற்றம் செய்யாதபடி திருந்திநடக்கும்படி ஆட்சிசெலுத்தி வருகிற அரசாங்கம் அந்த சிறைச்சாலைக்கு வெளியே இருந்து, வெளியிலுள்ளவர்களையும், சிறைச் சாலையிலுள்ளவர்களையும், ஆண்டு வருகிறது என்பதையும் யாவரும் அறிவர். அவ்வாறு ஆட்சி புரிவதும் ஒரு சட்டத்திற்கு உட்பட்டு அதிகாரம் செலுத்துகின்ற பல அதிகாரிகளைக் கொண்டே, தீர்ப்புக் கொடுத்து அமுல் நடத்துகின்றது என்பதையும், அவ்வாறு அமுல்நடத்துகிற அதிகாரிகளும், அச்சிறைச் சாலைக்கு வெளியிலிருந்தே தீர்ப்புக் கொடுத்து, சிறைச் சாலைக்குள்ளே போகும்படியும், அங்கு இருக்கும்படியும், தீர்ப்பு (தண்டனைக் காலம்) முடிந்ததும் வெளியே செல்லும்படியும் அமுல் நடத்துகிறார்கள் என்பதையும் யாவரும் ஒப்புக் கொள்ளுவர்.

## 14. மண்ணுலகிலுள்ள வாழ்வு சிறைச்சாலை வாழ்வோடு ஒத்திருத்தல்:-

மேலே கண்ட உதாரணத்தை மனதில் நன்றாக வாங்கிக் கொண்டால் இப்பூவுலகில் வாழ்கின்ற நாம் நம்முடைய விருப்பப்படி பிறக்கவும், இருக்கவும், இம்மண்ணுலகிலுள்ள பாரமுள்ள ஊனுடலை விட்டு, விண்ணுலகுக்குச் செல்லவும் முடியாமலிருப்பதால், இம்மண்ணுலக வாழ்வே ஒரு பெரிய சிறைச் சாலையின் வாழ்வை ஒக்கும், என்பதை உணர்ந்து கொள்ளலாம். அதில் கொலையும், தற்கொலையும் உடலைச் சேதிப்பதே தவிர, ஊனுடலில் எவ்விதச் சேதமுமின்றி ஆவி பிரிகின்ற சாதாரணச் சாவோடு

ஒப்பிடக் கூடியதன்று. அது சிறைச் சாலையிலிருந்து விடுதலை பெற்றுப் போகுமுன், சிறைச் சாலையிலுள்ள கட்டிடத்தைச் சேதம் செய்து, இடித்து வெளியேறின மூர்க்கரின் செயலோடு சேர்ந்ததாகவும், அதற்குரிய தண்டனைக் குரியதாகவும் அமையும் என்று அறிந்திருத்தல் வேண்டும்.

## 15. நாம் செய்த நல்வினை தீவினைகளே நமது இன்ப துன்பத்திற்குக் காரணம்.

இப் பூவுலகில் ஒவ்வொருவர் ஒவ்வொரு பெயருடன் ஒவ்வொரு நிலையில் ஆணுகவும், பெண்ணுகவும், பணக்காரனுகவும், எளியவனுகவும் பிறந்திருப்பதற்கும், இன்ப துன்பம் வந்துகொண்டிருப்பதற்கும், புகழ் இகழ் வருவதற்கும், பிணி மூப்புச் சாக்காடு வருவதற்கும், நல்ல மனைவி, நல்ல கணவன், நல்ல பிள்ளைகள் வாய்ப்பதற்கும், அவை பல்வேறு விதமாக மாறி அமைவதற்கும், நாம் முன்பு செய்த செயல்களைக் கொண்டு, நம்மை ஆண்டுவருகின்ற ஆண்டவன் நியாயத் தீர்ப்புக் கொடுத்து, அமுல் நடத்தி வருவதே காரணம் என்று இந்து சமயம் எவரும் மறுக்க முடியாத அரியதோர் அடிப்படையான பொது உண்மையைக் கண்டு தெளிந்து, உணர்ந்து உலகத்திற்கு உணர்த்துகிறது.

அதனுலேயே,

''வினைப்போகமே ஒரு தேகம் கண்டாய் வினைதான் [ஒழிந்தால்
தினைப்போதளவும் நில்லாது கண்டாய்''

என்றும்,

''மேலைத் தவத்தளவே ஆகுமாம் தான்பெற்ற செல்வம்''

என்றும்,

"பேறு, இழவு, இன்பமொடு, பிணி, மூப்பு, சாக்காடு
என்னும்
ஆறும் முன் கருவுட் பட்டது, அவ்விதி அனுபவத்தால்
ஏறிடும் முன்பு செய்த கன்மம் இங்கு இவற்றிற்கு ஏது
தேறு நீ இனிச் செய் கன்மம் மேலுடற் சேருமென்றே"

என்றும் சாஸ்திரங்கள் கூறுகின்றன.

## 16. நமது சொந்த இடமும் வந்த இடமும்.

மேலே சொன்னவற்றை நன்ருகப் புரிந்து கொண்டால் நாம் இதற்கு முன் சுதந்திரமாக வாழ்ந்திருந்தோம் என்பதும். அந்த வாழ்க்கை சிறைச்சாலையாகிய இப்பூவுலகிற்கு வெளியே விண்ணுலகில்தான் இருந்திருக்க வேண்டும் என்பதும், அவ் விண்ணுலகில் தான் ஆண்டவனது அரசாட்சியும், அவரது அதிகாரிகளும் இருக்க வேண்டுமென்பதும், அவர்களது தீர்ப்பின்படி நாம் இப் பூலோக சிறையில் வாழவேண்டிய காலவரையறை முடிந்ததும் விண்ணுலகம் சென்று தான் வாழ வேண்டும் என்பதும், அங்குள்ள வாழ்க்கையே நமது சுதந்திரமான, நிரந்தரமான வாழ்க்கை என்பதும், அவ்விண்ணுலகே நம்முடைய சொந்த உலகமென்பதும், இம்மண்ணுலக வாழ்க்கை தற்காலிகமாக, சுதந்திரமற்று வாழவேண்டிய சிறைச்சாலை என்பதும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளக்கமாகிவிடும்.

அதனுலேயே,

"அண்ணலே எனை ஆண்டு கொண்டருளிய அமுதே
விண்ணிலே மறைந்தருள்புரி வேத நாயகனே
கண்ணினுல் திருக்கயிலையிலிருந்த நின்கோலம்
நண்ணி நான் தொழ நயந்து அருள்புரியெனப்
பணிந்தார்"

என்று சேக்கிழாரும்,

" வந்த வரவை மறந்து மிக்க மாதர், பொன், பூமி
மயக்கத்தில் ஆழும்
இந்த மயக்கை அறுக்க எனக்கு எந்தை மெஞ்ஞான
எழில்வாள் கொடுத்தான்
சங்கர சங்கர சம்பு"—என்று தாயுமானுரும் அருளிச் செய்திருக்கின்றுர்கள்.

திருவள்ளுவரும்,

" ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வானம் நணியதுடைத்து"—என்றும்,
" கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி"—

என்றும் அருளிச் செய்திருக்கின்றுர்.

இவற்றில் சிறைச்சாலையில் அடைபட்டு இருக்கப் பட்ட ஒருவன், எப்பொழுது விடுதலை அடைவோம், எப்பொழுது சொந்த ஊருக்குப் போவோம், என்று சதாவும் எவ்வாறு எண்ணிக் கொண்டிருப்பானே அதேபோல நாம் இப் பூவுலகில் வாழுகின்ற சிறைச்சாலை வாழ்க்கை தற்காலிகமானது; நிரந்தரமான வாழ்வு இல்லை என்பதையும், நமது நிரந்தரமான வாழ்வு வானுலகில் உள்ளது என்பதையும் யார் யார் சந்தேக விபரீதமின்றித் தெளிந்து உணர்ந்து கொள்ளுகிறுர்களோ, அவர்களது ஊனுடல் இப் பூவுலகில் இருந்து வந்தாலும் அவர்களுடைய உள்ளமும், உயிரும் வானுலக வாழ்விலேயே கருத்தூன்றி நிற்கும். இவ்வுண்மையை உள்ளவாறு உணர்ந்த பெரியோர்கள் திரும்பவும் இம் மண்ணுலகில் பிறக்காதிருப்பதற்கான மார்க்கத்திலேயே தலைசிறந்து நிற்பர் என்பதில் யாருக்கும் சந்தேகம் இருக்க முடியாது.

## 17. வானுலக வாழ்க்கையில் நாட்டமும் தேட்டமும் அரும்புதல்.

நமது பாரமுள்ள ஸ்தூல உடலை குடம்பை என்று வள்ளுவரும், கூடு என்று ஔவையாரும், புழுக்குரம்பை, குப்பாயம் என்று மணிவாசகரும், கனத்த சட்டை என்று கீதாச்சாரியாரும், யாக்கை ஊனுடல் என்று கற்றவர்களும், கட்டை என்று முதிர்ந்த அனுபவசாலிகளும், பிணம், சவம் என்று மற்றவர்களும், சொல்லி வருவதையும் சிந்தனை செய்தல் வேண்டும். நான்கு பேர் தூக்க வேண்டிய ஒரு பாரமுள்ள கட்டையை, சொப்பனத்தில் தொழிற்படுகின்ற நம்முடைய உண்மையான உள் உடல், தூக்கித் திரிய வேண்டியதிருக்கிறது என்பதை உணரும் போது தான் நம்முடைய சுதந்திரமற்ற நிலை நன்ருகப் புலனுகும். கள்ள மாட்டுக்கு அதன் துடுக்கையும், வேகத்தையும் அடக்கும் பொருட்டு ஒரு கட்டையைக் காலில் பிணைத்திருப்பதுபோல், நாமும் ஒரு கட்டைக்குள் போடப்பட்டு, அதைத் தூக்கித் திரிகின்ருேம், என்ற உண்மையும் புலப்படும். அப்பொழுது தான் நம்முடைய சுதந்திரமுள்ள நிரந்தரமான விண்ணுக வாழ்வில் நமக்கு உண்மையான நாட்டமும் தேட்டமும் அரும்ப ஆரம்பிக்கும்.

## 18. வானுலகில் வாழும் பாரமில்லாத நமது ஆவி உடலின் தன்மை.

நம்முடைய பாரமுள்ள ஊனுடம்பு தூங்கும்பொழுது உணர்ச்சியற்றுக் கிடக்க, சொப்பனத்தில் நமது ஆவி அல்லது உள்உடல், சகல அவயவங்களோடும், எல்லாவிதமான இன்ப துன்பங்களையும் அநுபவித்து வருகின்றதை நாம் உணர்வதிலிருந்து, அந்த உடல் தொழிற் படுவதற்கு பாரமுள்ள ஊனுடம்பு அல்லது ஸ்தூல உடலின் உதவி தேவை

யில்லை என்பதைத் தெரிந்து கொள்ளலாம். சொப்பனத்தில் நாம் எங்கும் தட்டுத் தடையின்றி போக்கு வரவு புரிவதிலிருந்து, அது எவ்வித கட்டுப் பாட்டிற்கும் அடங்காத ஒரு சரீரம் என்றும், அதில்தான் நமக்குரிய சகல உணர்ச்சிகளும், சகல அவயவங்களும், மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்ற அந்தக் கரணங்கள் என்னும் உள் அவயவங்களும், தச வாயுக்களும், உயிரும் இருக்கின்றனவென்றும் புலனுகும். அந்த உள்ளுடல் சொப்பனத்தில் செய்கின்ற பலவித செயல்களும், உணர்ச்சிகளும், ஸ்தூல உடம்பிலுள்ள அவயவங்கள் மூலமாகப் பிரதிபலிப்பதை யாவரும் உணரக்கூடும். அதில் வாய் பேசினுலும், பாடினுலும், அலறினுலும், உளறினுலும், ஸ்தூல உடம்பில் அது பிரதிபலித்து, பக்கத்தில் உள்ளவர்கள் கேட்கக் கூடியதாக சப்தம் கேட்பதும், அதில் பயந்து நெஞ்சு பதை பதைத்தால், ஸ்தூல உடம்பிலுள்ள நெஞ்சு பதை பதைப்பதும், அதில் கையையோ காலையோ உதைத்தால், ஸ்தூலக் கையும், காலும், உதைக்கப் பெற்றுக் காயமுண்டாவதும், அதில் இன்ப துன்பம் அநுபவித்தால், ஸ்தூல உடலில் அது பிரதிபலிப்பதும் யாவரும் அறிந்ததே. அவ்வாறு அறிந்தும்கூட விழிப்பு நிலையில் நம்முடைய ஸ்தூல உடலால் நாம் செய்கின்ற சகல காரியங்களும், அநுபவிக்கின்ற சகல இன்ப துன்பங்களும், சொப்பனத்தில் தனித்துத் தொழில்படுகிற சூக்குமமான ஆவி உடலாலேயே செய்தும், அனுபவித்தும் வருகிறேம் என்பதைப் பெரும்பாலோர் உணராதிருக்கின்றனர்.

இந்த உண்மையைச் சிறிது ஆராய்ந்து உணர்ந்து கொண்டால் நமது ஆவி உடலானது சொப்பனத்தில் ஸ்தூல உடலுக்குள் கட்டுப் பட்டிருந்த போதிலும், அந்தத் ஸ்தூல உடலின் உதவியின்றித் தனித்து இயங்கக் கூடியதாகவும், சொப்பன அநுபவங்களை அநுபவிக்கக்கூடியதாகவும் விழிப்பு நிலையில் ஸ்தூல உடல் மூலம் செய்யப் பெறும்

காரியங்கள் அனைத்தையும் செய்வதும் ஆவி உடலே, என்பது தெளிவாகும். மேலும் நமது ஆவி உடலானது ஸ்தூல உடம்புக்குள் கட்டுப் பட்டிருந்த நிலையினின்றும் நீக்கப் பெற்று (ஆவிபிரிந்து) ஆவி உலகம் சென்று அங்கு இருக்க வேண்டிய காலம் வரை வாழ்ந்தும், வளர்ந்தும், இன்ப துன்பம் அனுபவித்தும், பலவித அநுபவங்கள் பெற்றும் வருகின்றது என்பதும், அதுவே நமது உண்மையான உடல் என்பதும் சந்தேகமின்றித் தெளிவாகிவிடும். அன்றியும் அந்த உடல் இப்பூவுலகிலுள்ள ஐம்பெரும் பூதங்களாலும், எவ்வித அணுக் குண்டுகளாலும் அழிக்கவோ சிதைக்கவோ முடியாத மாயை என்ற ஒரு பொருளிலிருந்து ஆக்கப் பெற்ற தென்பதையும் அந்த உடலே பெயரைத் தாங்கியிருக்கிறது என்பதையும் உணர்ந்து கொள்ளுதல் அவசியம்.

19. பெயரிடப் பெற்றிருப்பது ஆவி உடலுக்கே:-

ஒருவனுக்கு இடப்பெற்றிருக்கிறபெயர் அவனுடைய உயிருக்கு இல்லை என்றும், ஊனுடலாகிய பாரமுள்ள ஸ்தூல சரீரத்திற்கு இல்லை என்றும், அவையிரண்டும் சேர்ந்திருக்கிற நிலைக்கும் இல்லையென்றும்,மேலே சொன்ன ஆவி உடலுக்கே என்றும் உணர்ந்திருத்தல் வேண்டும். ஆவி உடலே, சூக்குமசரீரம், யாதனு சரீரம், ஆவி, நுண்ணுடல், உள்ளுடல், விண்ணுடல் என்று பல பெயர்களால் அழைக்கப் படுகின்றது.

மேலும் அவ்வாறு இடப்பெற்றிருக்கிற பெயர்களும், நாம் கருவில் இருக்கும் பொழுதே தீர்மானமான பெயர்கள் என்பதையும், அப்படிப்பட்ட நாமும் ஒரு நியாயமுள்ள அரசாங்கத்தாரால் தீர்ப்புக் கொடுக்கப்பெற்று, இப்பூவுலகில் பிறந்திருக்கிறோம் என்பதையும், இங்குள்ள பல்வேறு நிலைகளுக்கு நாம் நம்முடைய முன்பிறவிகளில்

செய்த வினைகளேகாரணமாவதால் ஆண்டவனது ஆட்சியில் பக்ஷபாதம் ஒரு அணுவளவும் கிடையாது என்பதையும், என்று மக்கள் உணர்வார்களோ, அன்றுதான் உலகத்திலுள்ள பலவிதமான பிணக்குகளும், பூசல்களும், பொருமைக் குணங்களும், தாக்குதல்களும் ஒழியும். இந்த உண்மையை ஒப்புக் கொள்ளாத எவரையும் ஒப்புக் கொள்ளும்படி செய்யவே, ஜோதிட சாஸ்திரம், ரேகை சாஸ்திரம் முதலியவற்றை வெற்றியுடன் இந்துக்கள்கண்டுபிடித்து; அவற்றைக் கையாண்டு நிரூபித்திருக்கிறார்கள். இன்றும் அவற்றைக் கையாளுகிற முறையில் கையாண்டால் எம்மதத்தவரையும், எம்மொழியாளரையும், இந்த அரிய பெரிய அடிப்படையான உண்மையை ஒப்புக் கொள்ளும்படி செய்து விடலாம்.

## 20. நமது உண்மையான அம்மையப்பன் ஆண்டவனே.

ஆண்டவன் நமக்கு மேலே சொன்ன ஆவி உடலைக் கொடுத்ததினுலேயே நம்முடைய ஆன்றோர், ஆண்டவனை அம்மையப்பன் என்று சொன்னார்கள் என்பதையும் நாம் உணர்ந்து கொள்ளுதல் வேண்டும். ஆவி உலகத்தில் அந்த ஆவி உடல் அழிக்கப் பெற்று, அதனுள்ளிருந்த உயிர் அணுப்பிரமாணமுள்ள புரியட்டக சரீரம் எனப்படும் காரணசரீரத்தோடு பிரிவதே நம்முடைய உண்மையான மரணமாகும். அப்பொழுதுதான் நமது பெயரும், வடிவமும், பெற்றோர், சுற்றம் என்ற உறவு முறைகளும் நீங்கப் பெறுகின்றன. அவ்வாறு காரண சரீரத்தோடு செல்லுகின்ற உயிரின் மண்ணுலக விண்ணுலக செயல்களைப் பொருத்தே மறுபிறவிக்குரிய தீர்ப்புக் கொடுக்கப் பெறுகின்றது. அந்தத் தீர்ப்பின்படி எந்த உயிர் எந்த இடத்தில், எவருக்கு ஆணாகவோ, பெண்ணாகவோ பிறக்கவேண்டுமோ அவ்வாறு பிறப்பதற்கு வேண்டிய ஆவி உடலுக்கு உரிய அச்சுக் கொடுக்கப் பெறுகிறது. அவ்வாறு ஆண்டவன்

ஒவ்வொரு உயிருக்கும், ஒவ்வொரு பிறவியிலும் கொடுக்கின்ற ஆவிஉடலுக்குரியஅச்சு,அவனுடையஆணையின்படி ஒவ்வொரு தந்தையார் உடலில் இரண்டு மாதங்களும், தாயார் உடலில் பத்து மாதங்களும் தங்கியிருந்து ஸ்தூல உடலுடன் கூடி இரண்டு உடல்களும் ஒன்ருக வளர்ச்சி பெற்று இப்பூவுலகில் பிறக்கிறது. அதுவே நமது பிறப்பாகிறது. அதனுலேயே குழந்தையை அவ்வாறு ஆண்டவன் கொடுக்க, நமது தாய் தந்தையர்கள் பெற்றவர்களாகி அந்தப் பிறவிக்கு மட்டும் அம்மையப்பனுகிருர்கள் என்றும், ஆண்டவனே நமது பிறப்புகள் எல்லாவற்றிற்கும், அம்மையப்பன் ஆகிருன் என்றும், அதனுலேயே அவன் நமது பெற்ருேரைப் பார்க்கினும் எத்தனையோ மடங்கு நம்மீது கருணை உடையவனுக இருக்கிருன் என்றும் அனுபூதிமான்கள் கண்டு சொல்லியிருக்கிருர்கள்.

## 21. ஆண்டவனது அருள் வடிவங்கள் பாரமில்லாதவை.

ஆண்டவன் நமக்குக் கொடுத்திருக்கிற உண்மையான உடலே பாரமில்லாததாகவும், சாதாரணக் கண்களால் காண முடியாததாகவும் இருக்குமானுல், ஆண்டவன் தனக்குத் தானே எடுத்துக் கொள்ளுகிற எந்த உருவமும், அருள் திருமேனியாகவும், நம்முடைய ஆவி உடலைவிட (சூக்கும சரீரத்தை விட) மிக மிக மென்மையானதாகவும், சாதாரணக் கண்களால் காண முடியாததாகவும்தான் இருக்க வேண்டும் என்பதை யாவரும் உய்த்து உணர்ந்து கொள்ளக் கூடும். இந்த உண்மையை உணர்ந்து கொண்ட எந்தப் பகுத்தறிவாளியும், விநாயகப் பெருமான் ஒரு பெருச்சாளியை வாகனமாகக் கொண்டிருக்க முடியுமா? அப்படி இருப்பாரானுல் அந்தப் பெருச்சாளி நைந்து சட்னியாகி விடாதா? ஆறுமுகங்களைக்

கொண்ட கந்தப் பெருமான் எப்படிப் படுத்திருப்பார்? எப்படிப் படுத்திருந்தாலும் மூக்கு நைந்து விடாதா? நடராஜப் பெருமான் தூக்கிய காலோடு சதாவும் எப்படி ஆடிக் கொண்டிருக்க முடியும்? மகா விஷ்ணு கருட வாகனத்திலும், அந்தக் கருடன் ஒரு நாகப் பாம்பின் மேலும் எப்படி வீற்றிருக்க முடியும்? அப்படி வீற்றிருந்தால் அந்த நாகம் பிழைக்குமா? என்பன போன்ற கேள்விகளைக் கேட்கத் துணியமாட்டான்.

## 22. விக்ரகங்கள் விண்ணுலகிலுள்ள மூர்த்திகளின் திரு உருவங்களே.

இவற்றிலிருந்து அங்கிங்கெனுதபடி உயிருக்கு உயிராய் நீக்கமற நிறைந்திருக்கிற அருவப் பொருளாகிய பரமன், ஒவ்வொரு காரணத்திற்காக எடுத்துக் கொண்ட திரு மேனிகளுடன் ஒவ்வொரு புவனத்திலும் இருந்து, படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் பஞ்ச கிருத்தியங்களையும் செய்து, உலகங்களை யெல்லாம் ஆண்டு வருகிருன் என்பதை ஒரளவு உணர்ந்து கொள்ளக் கூடும். இந்துக்கள் அவ்வாறு ஆண்டவன் எடுத்துக் கொண்ட திருமேனிகளின் விபரங்களையெல்லாம் விண்ணுலகிலிருந்து விளங்கி, இம்மண்ணுலகில் அந்தந்த உருவங்களை, சிற்ப சாஸ்திர முறையில் சிலைகளாகத் தயார் செய்து, அவற்றில் அததற்குரிய மூர்த்திகளைப் பக்தர்களுக் காக எழுந்தருளி வீற்றிருக்கும்படி பிரார்த்தனை செய்து, விக்ரக ஆராதனை செய்து வருகிருர்கள். அதிக நாள் கெடாமல் இருப்பதற்காகவும், விஞ்ஞான ரீதியாகவும், அவற்றைக் களிமண்ணுல் செய்யாமல் கருங்கல்லாலும், செம்பாலும் அமைத்தார்கள்.

## 23. விக்ரகங்களைக் கருங்கல்லாலும், செம்பாலும் அமைத்திருப்பதின் விஞ்ஞான விளக்கம்.

விக்ரகங்களைக் கருங்கல்லாலும், செம்பாலும் செய்தால் அவை அதிக நாள் கெட்டுப் போகாமல் இருக்கலாம் என்பதில் யாருக்கும் சந்தேகம் இருக்க முடியாது. ஆனால் அவற்றை நமது முன்னோர்கள், விஞ்ஞான ரீதியாகவும் அமைத்திருப்பதாகச் சொல்லும் பொழுது, கல்லிலும் செம்பிலும் என்ன விஞ்ஞானம் இருக்கிறதென்று பலரும் கேட்கலாம். இந்துக் கோயில்களில் ஏராளமான தங்கமும், வெள்ளியும் இருக்கும் பொழுது, அவையும் கெட்டுப் போகாத உலோகங்களாக இருக்க, அவற்றால் மூல ஸ்தானத்திலுள்ள சிவலிங்கத்தையும், வெளியில் எழுந்தருளியாகின்ற உற்சவ மூர்த்திகளையும் செய்யாமல், சிவலிங்கத்தைக் கல்லாலும், உற்சவ மூர்த்திகளைச் செம்பாலும் அமைத்ததற்குப் பல காரணங்கள் உண்டு.

மின்சார சக்தியைத் தாங்கிச் செல்வதற்காகவும், செலுத்துவதற்காகவும், விஞ்ஞானிகள் செம்புக் கம்பிகளைப் பயன்படுத்துவது போல, இதர உலோகங்களால் செய்யப் பெற்ற கம்பிகளைப் பயன்படுத்துவதில்லை என்பதை யாவரும் அறிவர். வானில் உண்டான சப்தத்தை இழுத்துக் கொள்வதற்காக, 'ரேடியோ'க் கருவிகளுக்கு இன்றைய விஞ்ஞானிகள் செம்புக் கம்பிகளைப் பயன்படுத்துவதுபோல, வேறு இதர உலோகங்களால் செய்யப்பெற்ற கம்பிகளைப் பயன்படுத்துவதில்லை என்பதும் யாவரும் அறிந்ததே. மேலும் பாரமுள்ள ஈயத்தை கவ்வி எடுக்கும் ஆற்றல் செம்புத் துண்டுக்கு இருப்பதுபோல் வேறு எந்த உலோகத்திற்கும் இல்லை என்பதும் யாவரும் அறிந்ததே. இன்றைய விஞ்ஞானிகள், சென்ற ஒரு நூற்றாண்டினுள் கண்டு, கையாண்டு வருகிற இந்த உண்மையை, நம்முடைய மெஞ்

ஞானிகள், பல்லாயிரம் வருஷங்களுக்குமுன் கண்டு, ஆண்டவனது திருவருள் சக்தியைத் தன்வசம் இழுத்து வாங்கிக் கொள்ளவும், தன்னிடம் நிறுத்திக் கொள்ளவும், பக்தர்களுக்கு அதன் மூலம் அருள் பாலிக்கவும், மற்ற உலோகங்களால் உற்சவ மூர்த்திகளைச் செய்விக்காமல், செம்பினுலேயே செய்திருக்கிறார்கள் என்பதை அறியும் பொழுது, அவர்களுடைய மெஞ்ஞானம் இன்றைய விஞ்ஞானத்தை எந்த அளவில் மிஞ்சி இருந்தது என்பதைக் கண்டு கொள்ளலாம். மேற்கண்டவற்றிலிருந்து உலோகங்கள் எல்லாவற்றிலும் செம்புக்கு மிகுந்த ஆற்றல் உண்டு என்பதும், அது இன்றைய விஞ்ஞானிகள் மட்டும் அல்ல, பண்டைக்காலம் தொட்டே நமது மெஞ்ஞானிகளும் கண்ட உண்மையாகும் என்பதும் புலனுகும்.

## 24. கல்லினது ஆற்றல் செம்பினது ஆற்றலை விடப் பன்மடங்கு அதிகமாக உள்ளது.

செம்பு எப்படி மின் அலைகளைத் தன்பால் இழுக்கவும், கடத்தவும் ஆற்றலுடையதோ, (அதுபோல) கல்லானது எந்தப் பொருளையும் தன்பால் இழுத்துக் கொள்ளக்கூடிய சக்தி வாய்ந்தது. உதாரணமாக, மலையானது, ஆகாயத்தில் சென்று கொண்டிருக்கும் மேகத்தைத் தன்பால் இழுத்துக் குளிர்வித்து மழையாகப் பொழியும்படிச் செய்கிறது. இன்னும் கல்லில் பஞ்ச பூதங்களின் தன்மையும் விசேஷமாக அடங்கியிருந்து வெளிப்படுவதுபோல் மற்ற உலோகங்களில் இல்லை. பஞ்சபூதங்களாவன; 1. ஆகாயம், 2. காற்று, 3. நெருப்பு, 4. நீர், 5. நிலம்.

1. வெளியில் உள்ள சப்தத்தைத் தன்னகத்தே இழுத்து ஒடுக்கி, பின்னர் வெளிவிடும் ஆற்றல் ஆகாயத்திற்கு உண்டு. அதே தன்மை கல்லுக்கும் உண்டு. கல் மண்டபங்களிலும் மலைப் பிரதேசங்களிலும், சப்தங்கள்

எதிரொலியாவதுபோல வேறு எந்த இடங்களிலும் கிடையாதென்பதை உணர்ந்து கொள்ளலாம்.

2. கல்லிலே காற்று உண்டு என்பதை "கல்லினுள் தேரைக்கும்" என்ற தொடரினை ஆய்வதிலிருந்து தெரியலாம். காற்று இல்லாத இடத்தில் எந்த ஜீவராசியும் உயிர் வாழமுடியாது. கல்லினுள் தேரை வசிக்க வேண்டுமானால் கல்லிலே காற்று இருக்க வேண்டுமல்லவா? எனவே கல்லில் இரண்டாவது சொல்லப்பெற்ற காற்றும் உள்ளது.

3. இனி கல்லிலே நெருப்புத் தங்கி யிருப்பதுபோல் வேறு எந்தப் பொருளிலும் இல்லை. அதனால்தான் பழங் காலத்தில் நெருப்பு உண்டாக்க வேண்டுமானால் இரு கற்களை ஒன்றோடு ஒன்று உராயச் செய்து நெருப்பினை உண்டாக்கி உபயோகித்தார்கள். மரக்கட்டைகளைக் கடைந்தும் நெருப்பை உண்டாக்கினார்கள். இருந்தாலும் கல்லில் தான் நெருப்பின் சக்தி மிகுதியாக இருக்கிறது. அதிலும் சிக்கிமுக்கிக் கற்கள் என்பவை அந்த வகையில் மிகுந்த ஆற்றல் உடையவை. அநேகமாக அவைதான் தீயினை உண்டாக்க அன்னாளில் உபயோகப் படுத்தப் பட்டன. ஆகவே கல்லில் நாம் மூன்றாவதாகச் சொல்லிய நெருப்பும் உள்ளது.

4. மேற்கூறிய மூன்று ஆற்றல்களை உடையதாக இருந்தாலும் கல்லானது தன் இயல்பான குளிர்ந்த நிலையிலிருந்து மாறாமல் இருக்கும். இரு கற்களை ஒன்றோடு ஒன்று உராயச் செய்தால் நெருப்பு உண்டானபோதிலும், சாதாரணமாகக் கல்லைத் தொட்டால் அது தண்ணீர் போன்று தண்ணென்றிருப்பதை எல்லோரும் அனுபவத்தில் உணரலாம்.

5. இனி ஐந்தாவதாகக் கல்லில் 'நிலம்' என்ற கடைசிப் பூதம் இருக்குமா? என்பதைக் கேட்கவே வேண்டாம். கல்லே நிலத்தைச் சேர்ந்ததுதான் அல்லவா?

கல்லிலே ஐம்பூதங்கள் இருப்பதற்கும் ஆண்டவனுக்கும் என்ன சம்பந்தம் இருக்கிறது என்று சிலர் கேட்கலாம்? ஆண்டவனே ஐம்பூதங்களில் கலந்துதான் இருக்கிறார் என்பதற்கு மணிவாசகனார் திருவாசகம் சான்று தருகிறது.

''பாரிடை ஐந்தாய்ப் பரந்தாய் போற்றி
நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி
தீயிடை மூன்றாய்த் திகழ்ந்தாய் போற்றி
வளியிடை யிரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி
வெளியிடை ஒன்றாய் விளைந்தாய் போற்றி''

என்பது திருவாசகத்தில் போற்றித் திருவகவலில் வரும் அவ்வழகமைந்த வசனமாகும். ஐம்பூத வடிவாய் விளங்கும் அவ்வாண்டவனது உருவத்தை ஐம்பூதங்களும் அடங்கிய ஒரு பொருளில் வீற்றிருக்கும்படி வேண்டுதல் செய்து வழிபடுவது சாலச் சிறந்ததல்லவா? அதனால்தான் நமது மூதாதையர்கள் நாம் வழிபடும் மூர்த்திகளுடைய விக்கிரகங்களைக் கல்லால் அமைத்தார்கள். மலைகளைத் தெய்வமாகக் கொண்டு வழிபடுவதும் இந்தத் தத்துவத்தைக் கொண்டுதான் என்று சொன்னால் அது மிகையாகாது.

மேலும் நெருப்பு எங்கு உள்ளதோ அங்கு சோதியும் இருக்குமல்லவா? எனவே நெருப்பின் தன்மையைக் கொண்ட கல்லிலே சோதியும் உள்ளது. ஆண்டவனும் சோதிவடிவாக இருக்கிறார் என்பதற்கு,

'சோதியே சுடரே சூழ் ஒளிவிளக்கே' (மணிவாசகர்)
'திரு ஐயாறு அகலாத செம்பொற் சோதி'
(நாவுக்கரசர்)
'சோதியாய் நிறைந்தான் சுடர்ச் சோதியான்'
(சம்பந்தர்)

என்றெல்லாம் நமது நாயன்மார்கள் ஆண்டவனைப் போற்றியிருப்பதிலிருந்து அறியலாம். அந்தச் சோதி வடிவாகிய இலிங்கவடிவிலிருந்துதான் மற்ற நடராஜப் பெருமான், விநாயகப் பெருமான், முருகப் பெருமான் போன்ற மூர்த்திகளின் வடிவங்கள் தோன்றினமையால், இலிங்க வடிவத்தைச் செய்யும் கல்லினாலேயே மற்ற மூலஸ்தான வடிவங்களையும் அமைத்து வழிபட்டு வந்திருக்கிறார்கள்.

மூலஸ்தானங்களில் எழுந்தருளியிருக்கும் மூர்த்திகளுடைய வடிவங்களைக் கல்லினால் செய்து வழிபடும்பொழுது உற்சவ மூர்த்திகளின் உருவங்களை மாத்திரம் செம்பினால் செய்து வழிபடுகிறோம். உற்சவ மூர்த்திகளின் உருவங்கள், பல இடங்களுக்கும் மாற்றி மாற்றி எழுந்தருளச் செய்யும் படியாக இருப்பதால் அவற்றைக் கருங்கல்லால் அமைத்துக் கையாளுவது அவ்வளவு சுலபமானது அல்ல. அதனால் தான் கல்லுக்கு அடுத்தபடியாக, அதனுடைய சக்தியைப் பெற்றிருக்கும் உலோகமாகிய செம்பினால் உற்சவ மூர்த்திகளை அமைத்து, வழிபட்டு வருகிறோம் என்பதை உணர வேண்டும்.

### 25. கற்சிலையும், செம்பு விக்ரகமும் பிரதிஷ்டை செய்தபின் தெய்வீக சக்தி பெறுவதின் விளக்கம்.

சாதாரணமாக ஒரு கல்லாலோ, செம்பாலோ ஆக்கப் பெற்ற சிலையானது ஆலயங்களில் பிரதிஷ்டை செய்யப் பெற்றுக் கும்பாபிஷேகம் ஆனபின் தெய்வீக சக்தி பெற்று

விசேஷ வழிபாடுகளுக்கும், வணக்கங்களுக்கும் உரிய தகுதி பெற்றுத் திகழ்வது எங்ஙனம்? என்றும், அதை விளக்கு வதற்கு ஒரு உதாரணம், அல்லது உவமானம் சொல்ல லாமோ? என்றும் கேட்டால் நன்ருகச் சொல்லலாம். அறிவுடையோர் அதிலிருந்து அனுமானித்து உணர்ந்து கொள்ளலாம். சாதாரணமாக ஒருவர் ஒரு மடாதிபதியாக விளங்கி ஆட்சி நடத்துகிருர். மடாதிபதியாவதற்கு முன்னிருந்த மனிதர்தானே மடாதிபதியான பின்பும் இருக் கிருர் என்ருல் ஆமாம். ஆனல் அதற்கு முன்னிருந்த பெய ரும், சக்தியும் வேறு. மடாதிபதியானபின் அவருக்குரிய சிறப்புப் பட்டமும், சிறப்பு அதிகாரமும் வேறு. அப்படிப் பட்ட சிறப்புப் பட்டமும், சிறப்பு அதிகாரமும், எவ்வாறு பெறுகிருர்? அந்தந்த மடாலயத்தின் சட்ட திட்டங்களின் படி சில சடங்குகள் நடைபெறுகின்றன. பட்டாபிஷே கம் என்ற குடமுழுக்கு நடைபெறுகின்றது. புதிய சின்னங் கள் வழங்கப் பெறுகின்றன. சிறப்புப் பட்டமும் சிறப்பு அதிகாரமும் வழங்கப் பெறுகின்றன. அந்தப் பட்டமும், அதிகாரமும் மடாலயத்தாராலும், பொது மக்களாலும் அங்கிகரிக்கப் பெற்று அவற்றிற்குரிய சிறப்பு மரியாதை களுக்கும், சிறப்பு உபசாரங்களுக்கும் அவரைத் தகுதி உடையவராகச் செய்கின்றது என்பதை யாவரும் அறிவர்.

ஒரு சாதாரண மனிதன் ஒரு மந்திரிப் பதவியோ, அரச பதவியோ, வேறு பதவிகளோ பெறும்பொழுது, அரசாங் கத்தின் சட்டப்படி அததற்குரிய சடங்குகள் நடைபெற்று, அததற்குரிய சின்னங்கள் கொடுக்கப் பெற்று, அததற் குரிய அதிகாரம் வழங்கப் பெற்று, அரசாங்கத்தாராலும், பொது மக்களாலும் அவை அங்கீகாரம் செய்யப் பெற்று, சிறப்பு மரியாதைகளுக்கும், உபசாரங்களுக்கும், உரிய தகுதியைப் பெறுகின்ருன் என்பதையும் யாவரும் அறிவர்.

மேலே சொன்ன சிறப்புப் பட்டமும், சிறப்பு அதி காரமும் பெற்றவர்கள் உருவத்தால் முன்னிருந்தது

போலவே தோற்றம் அளித்தாலும், அவர்களுடைய சிறப்புப் பட்டமும், அதிகாரமும், ஆதிக்கமும், தகுதியும் முன்னிருந்த நிலைக்கு மேல் அதிகமாக உள்ளன என்பதை யாவரும் ஒப்புக் கொள்வர். அவ்விதப் பதவியையும், பட்டத்தையும், அதிகாரத்தையும் ஆதிக்கத்தையும் பெற்ற அவரது உடல் அதற்கு முன்னிருந்த உடலாகவும், வேற்றுமை ஒன்றும் இல்லாததாகவுமே இருக்கும் என்பதில் யாருக்கும் எவ்வித சந்தேகமும் இருக்க முடியாது.

இந்த உதாரணங்களைக் கொண்டு ஒரு சாதாரணக் கற்சிலை கும்பாபிஷேகத்தினால் என்ன சிறப்புப் பட்டமும், அதிகாரமும், ஆதிக்கமும், பதவியும், பெறுகின்றதென்பதை அறிவுடையோர் உய்த்துணர்ந்து ஏற்றுக் கொள்ள முடியும். பூலோகத்திலுள்ள அரசாங்கம் நாம் இவ்வுலகத்தில் பிறந்தபின் அனுசரிக்க வேண்டிய சட்டதிட்டங்களை அமைத்து அச்சட்ட திட்டங்களை அமுல் நடத்துகின்ற அதிகாரிகளை நியமித்து அவர்கள் மூலம் ஆண்டு வருகிறது. ஆனால் நம்மை இப்பூலோகத்தில் ஆணாகவும், பெண்ணாகவும், வெவ்வேறு நிலைகளில், வெவ்வேறு இடங்களில் பிறக்கும்படியும், வெவ்வேறு இன்பதுன்பம் அனுபவிக்கும்படியும், வெவ்வேறு வயது வரை வாழும்படியும், வயது முடிந்தபின் ஸ்தூல சரீரமாகிய கட்டையிலிருந்து ஆவி உடலைப் பிரித்து மேல் உலகங்களுக்குக் கொண்டு போய் அவரவர் செய்த புண்ணிய பாவங்களுக்குத் தகுந்த சுவர்க்க நரகமென்னும் அருள் பகுதியிலோ இருள் பகுதியிலோ வாழும்படியும், அததற்குரிய கால எல்லையில் அந்த ஆவி உடலை அழித்து மறு பிறவியில் தள்ளவோ அல்லது மேல் நிலைக்கு எடுத்துக் கொள்ளவோ செய்கின்ற அரசாங்கம் ஒன்று விண்ணுலகத்திலிருந்து ஆட்சி புரிவதையும், அந்த ஆட்சி வேதாகமச் சட்டதிட்டங்களுக்கு உட்பட்டு நடைபெறுவதையும், அச் சட்டதிட்டங்களை நிறைவேற்றுகின்ற பலதரப்பட்ட அதிகாரிகள் பலதரப்பட்ட அதிகாரங்

களோடும், பலதரப்பட்ட உருவங்களில் நம்முடைய கண்களுக்கு காண முடியாத சூக்கும நிலையிலிருந்து அமுல் நடத்தி வருகிறார்கள் என்பதையும், ஞான நாட்டம் உடையவர்களெல்லாம் ஓரளவு அறிவார்கள்.

## 26. சிவபரம்பொருளின் 25 மூர்த்தங்களும், மகா விஷ்ணுவின் பத்துத் திரு அவதாரங்களும்.

அவ்விதம் ஆண்டுவருகிற ஏகச்சக்ராதிபதியான ஆண்டவன் (பரம்பொருள்) ஒவ்வொரு சமயத்தில் ஒவ்வொரு காரணத்திற்காக ஒவ்வொரு வடிவு எடுத்து, போகியாயிருந்து போகத்தையும், யோகியாயிருந்து யோகத்தையும், வேகியாயிருந்து வேகத்தையும் (அடக்கி ஆளும் தன்மையையும்) விண்ணுலகத்திலுள்ள தேவர்கள் முனிவர்களுக்கும், மண்ணுலகத்திலுள்ள மனிதர்கள், ஞானிகள் முதலாயினோருக்கும் வெளிப்படுத்தி, தனது சட்டதிட்டங்களை வேதாகம வாயிலாக வெளிப்படுத்தியிருக்கிறார். அவ்விதம் ஒரே ஆண்டவனாகிய சிவ பரம்பொருள் எடுத்துக் கொண்ட மூர்த்தங்கள் 25 ஆகும் என வேதாகமங்கள் கூறுகின்றன. 1. சோமாஸ்கந்தன் (முருகப் பெருமான்) 2. நடராஜப் பெருமான் 3. இடபாருடர் 4. சந்திரசேகரர் 5. கல்யாண சுந்தரர் 6. பிக்ஷாடனர் 7. காமாரி 8. காலாரி 9. சலந்தராரி 10. திரிபுராரி 11. கசாரி 12. வீரபத்திரர் 13. தக்ஷிணா மூர்த்தி 14. கிராதர் 15. நீலகண்டர் 16. கங்காளர் 17. சக்ரதானர் 18. கெஜமுகானுக்ரகர் (விநாயகப் பெருமான்) 19. சண்டேசானுக்கிரகர் (சண்டேஸ்வரர்) 20. ஏகபாதர் 21. இலிங்கோற்பவர் 22. சுகாசீனர் 23. உமாமகேசுவரர் (பார்வதி பரமேஸ்வரர்) 24. அரியர்த்தர் 25. அர்த்தநாரீசுவரர். இம் மூர்த்தங்களைக் கொண்டதற்குக் காரணம் துஷ்டர்களை அடக்கியாளும் பொருட்டும், சிஷ்டர்களை அனுக்கிரகித்து அருளும் பொருட்டுமேயாம். இந்த 25 மூர்த்தங்களும்

மதுரைக் கோவிலில் சுவாமி சன்னிதியில் உள்ள நந்தி மண்டபத்தைச் சுற்றியுள்ள கல் தூண்களைச் சித்தரித்துக் கொண்டிருப்பதைக் கண்டு கொள்ளலாம். இதுபோலவே மகாவிஷ்ணு எடுத்துக் கொண்ட அவதாரங்கள் 10. அவை யாவன. 1. மச்யாவதாரம் 2. கூர்மாவதாரம் 3. வராக அவதாரம் 4. நரசிம்ஹ அவதாரம் 5. வாமனுவதாரம் 6. பரசுராமாவதாரம் 7. ராமாவதாரம் 8. கிருஷ்ணுவதாரம் 9. புத்த அவதாரம் 10. கல்கி அவதாரம் என்பன ஆகும்.

இந்துக்கள் வழிபட்டு வரும் அந்த 25 மூர்த்தங்களில் விநாயகப் பெருமானும், முருகப் பெருமானும் முக்கிய மானவையாகும். அவ்விரண்டு வரலாறுகளின் சுருக்கம் பின்வருமாறு:—

27. விநாயகப் பெருமான், முருகப் பெருமான் வரலாற்றுச் சுருக்கம்.

கஜமுகா சூரன் என்ற அசுரன் ஆயுதங்களாலோ, மனிதர்களாலோ, மிருகங்களாலோ அழிக்கப் படாத வரம் தனக்கு வேண்டும் என்று தவம் செய்து ஆண்டவனிடமிருந்து பெற்றுக் கொண்டான். அதைப் பெற்றபின் அந்தத் துணிவில் தேவர்களையெல்லாம் துன்புறுத்தியும் வந்தான். துன்பம் பொறுக்க முடியாத தேவர்கள் ஆண்டவனை நோக்கி மனமுருகிப் பிரார்த்தித்துத் தங்களுடைய துன்பத்தினை நீக்குவதற்காக அக் கொடியவனின் வலிமையை ஒடுக்க வேண்டுமென்று வேண்டினுர்கள். ஆண்டவனும் கஜமுகா சூரனுக்குத் தான் கொடுத்த வரத்திற்கு மாறுபடாத வகையில் யானை முகத்தோடு கூடிய கோடி சூரியப் பிரகாசமுள்ள ஒரு வடிவெடுத்துத் தனது கொம்பையே ஆயுதமாகக் கொண்டு தாக்கினுர். உடனே அசுரன் தனது வலியொடுங்க பெருச்சாளி வடி

வம் எடுத்துச் சரண் புகுந்தான். யானை முகமும், மனித உடலும் கொண்ட நம் விநாயகப் பெருமான் அவனைத் தன் வாகனமாகக் கொண்டார். அந்த வடிவமே நாம் வணங்கும் பிள்ளையார் வடிவம்.

மேலுலகில் சூரபன்மன் என்ற அசுரன் அரிய தவம் செய்து ஐந்து முகம் கொண்ட ஆண்டவனாலும் தான் அழிக்கப் பெறமுடியாத வரத்தினைப் பெற்று தேவர்களைத் துன்புறுத்தி வந்தான். அத்தேவர்கள் சிவபெருமானிடம் முறையிட, அவர் ஆறுமுகம் கொண்ட சோதி வடிவு கொண்டு சூரபன்மனைச் சம்ஹாரம் செய்தார். அப்படிக் கொண்ட ஆறுமுக சோதி வடிவம் தான், நாம் வழிபடும் முருகப் பெருமான்.

வரம் கொடுத்த ஆண்டவன், தான் எந்த வடிவிலிருக்கும் பொழுது தன்னை வணங்கி அவர்கள் வரம் பெற்றார்களோ அந்தவடிவில் நின்று அழித்தல் முறையன்று; மற்றவர்களால் அக்கொடியவர்களை அழிக்கவும் முடியாது; ஆகவேதான் இறைவன் அவர்கள்எதிர்பாராத வடிவுகளில் நின்று அவர்களைச் சம்ஹரித்து ஆட்கொள்ளும்படி ஆயிற்று. இதனை விளக்கியே கந்த புராணம் சூரனுக்கு அறிவுரை கூறும் சிங்கமுகன் வாயிலாக,

''வரமளித்த யாமழிப்பது முறையன்று வரத்தால்
பெருமை பெற்றுள்ள சூரனையடுவது பிறர்க்கும்
அரிது எனப் பரன் உன்னியே தான் உருவாகும்
ஒரு மகற்கொடு முடித்தும் என்றுன்னினுன் [உளத்தில்''

என்று அழகுறக் கூறுகின்றது.

இவை இவ்வாறாக இருக்க தென்னாட்டிலுள்ள சிவன் கோவில்களில் மேலே சொன்ன 25 மூர்த்தங்களில் ஏதாவது ஒன்றை வைத்து வழிபடாமல், மூலஸ்தானத்

தில் அருவமும், உருவமும் இல்லாத ஒரு இலிங்கத்தை வைத்து வழிபாடு செய்வதன் காரணம் என்ன என்று கேட்கலாம்.

### 28. சிவலிங்க வழிபாட்டின் விளக்கம்.

அருவமாயிருக்கின்ற பரம் பொருளை யாரும் அறிந்து கொள்ள முடியாது. அதனாலேயே மணிவாசகரும் "மூவரும் அறிகிலர், யாவர் மற்றறிவார்" என்று அருளியிருக்கின்றார். அதில் மும்மூர்த்திகளாலும் அறியமுடியாத பரசிவ நிலையை வேறு யார்தான் அறிய முடியும் என்கிறார். அறவே அறிய முடியாத அருவ நிலையிலுள்ள பரம் பொருளை யாரும், மனதில் பாவித்துக் கொள்ளவோ, பதித்துக் கொள்ளவோ, தியானித்துக் கொள்ளவோ முடியாதென்றால் அதை வழிபாடாற்றவும், பிறரை வழிபடச் செய்யவும் முடியாதல்லவா? ஏதோ ஒரு சக்தி, அண்டங்களையெல்லாம் தொழிற்படுத்திக் கொண்டு இருக்கின்றது என்று மாத்திரம் அனுமானித்து அறியலாம். அதனை விளக்கிக் கொள்ள, முற்றுவமையாக எதையும் சொல்லிக் கொள்ள முடியாதெனினும், சாதாரணமாக விளங்கிக் கொள்ளக் கூடியதான, ஒரு உபமானம் சொல்லலாம். சூரியனது கதிர்களை யாரும் கண்ணால் காணமுடிவதில்லை; பிறருக்குக் காட்ட முடிவதுமில்லை. அப்படிப் பட்ட சூரியனது கதிர்கள், பூமியில் பட்ட மாத்திரத்தில் பூமி சூடாவதை யாவரும் அறிவர். கதிர்களைக் காணமுடியாதது போலவே, சூட்டின் தன்மையையும் கண்களால் காண முடியாது. ஆனால் அக்கதிர்களை ஒரு பூதக்கண்ணாடி மூலமாக ஒரு பஞ்சின் மேல் ஒரு முகமாகப் பாயும்படி செய்தால், பஞ்சு தீப்பிடித்து, நாம் காணக்கூடியதாகவும், பிறருக்குக் காட்டக் கூடியதாகவும், அதனை நமக்கும், பிறருக்கும் உபயோகமாகும்படி செய்து கொள்ளக் கூடியதாகவும் இருக்கிறதல்லவா?

அது போலவே அருவமாய் உள்ள சிவபரம்பொருளும், (கருணை காரணமாக பிறருக்குக் காட்சி கொடுப்பதற்கென, எடுத்துக்கொண்ட இருபத்தைந்து திரு மேனிகளும் தோன்றுவதற்கு மூலாதாரமாகவுள்ள, அருவமும் உருவமும் இல்லாத,) அருவுருவ நிலையான சோதிசொரூபத்தை முதற்கண் தாங்கிக் கொள்ளத் திருவுள்ளம் கொண்டது. அந்த சோதி சொரூபமே சிவலிங்க வடிவமாகும். அந்த சோதி சொரூபத்திலிருந்து, மேலே சொன்ன 25 திருமேனிகளும் தோன்றி. ஒவ்வொரு காலத்தில் ஒவ்வொரு காரியத்தை நிகழ்த்தி, துஷ்ட நிக்ரகமும், சிஷ்ட பரிபாலனமும் செய்ய வேண்டியதாயிற்று. அதனுலேயே,

"அருவமும் உருவுமாகி, அநாதியாய்ப் பலவாய் ஒன்ருய்
பிரம்மமாய் நின்ற சோதிப் பிழம்பு, அதுஓர் மேனியாகக்
கருணை கூர் முகங்கள் ஆறும் கரங்கள் பன்னிரண்டும் கொண்டே
ஒரு திருமுருகன் வந்தாங்கு உதித்தனன் உலகம் உய்ய."

என்று முருகப் பெருமானது தோற்றத்தை நமது கச்சியப்ப சிவாச்சாரியார் அருளிச் செய்திருக்கிருர். ஆகவே யாரும் அறிய முடியாத அருவனுய் இருந்த பரமசிவம், பக்குவப்பட்ட ஜீவான்மாக்களுக்குக் காட்சி கொடுக்கவும், தமது ஆட்சியின் சட்டதிட்டங்களாகிய வேதாகமங்களை அருளிச் செய்யவும் எடுத்துக் கொண்ட மூர்த்தமே சிவலிங்க வடிவாகும்.

ஒருவருடைய கருத்து மற்றவர் அறியமுடியாத அருவநிலையில் இருக்கிறது. இருந்தபோதிலும், அக்கருத்தை அவர் வெளியிடுகின்ற சொல்லானது, அறியக்கூடாத அருவ நிலையிலும் இல்லை; கண்ணுல் காணக்கூடிய உருவ நிலையிலும் இல்லை; அருவுருவ நிலையில் உள்ளது.

ஆனல் அச் சொல்லின் பொருளை உணர்ந்தவர்களுக்கு மட்டுமே, அப்பொருளை உணர்த்தக்கூடிய அடையாள மாக, அச்சொல் அமைகிறது. அதுபோலவே சிவபரம் பொருள், கருத்தை ஒத்த அருவ நிலையிலிருந்து இறங்கி, அக்கருத்தை உணர்த்தக்கூடிய சொல்லே போன்று தெரிந்த வர்கள் உணர்ந்து கொள்ளக்கூடிய ஜோதி வடிவம் தாங்கி அருவுருவ நிலை எய்துகிறது. அதை சதாசிவம் என்பர் அறிந் தோர். அது வேதாகமங்களாகிய சொற்பிரபஞ்சம் தோன்றுவதற்கும், ஒடுங்குவதற்கும் காரணமான மூர்த்த மாகும். இன்றைய விஞ்ஞானிகள் ஆகாயம் என்ற பூதமே சப்தங்களை வாங்கி ஒடுக்கவும், திரும்பவும் அதனை வெளி யிடவும் ஆற்றல் வாய்ந்த பூதம் என்று, வானெலிக் கருவி களைக் கொண்டு கண்டு அதிசயிக்கிருர்கள். ஆகாயம் என்ற அப்பூதம் ஒன்று இருந்து, நாம் போடுகின்ற கூப்பாடு களைத் தனது சக்தியினல் ஒடுக்கிக் கொள்ளாவிட்டால், எல்லோருடைய சப்தமும் எல்லோருக்கும் கேட்டு, ஒருவர் சொல்வதை மற்றவர் கேட்க முடியாத அவல நிலை ஏற் பட்டு விடும். நமது முன்னேர்கள் பல்லாயிரம் வருஷங் களுக்கு முன்னதாகவே, இதன் உண்மையைக் கண்டு 'வெளியில் ஒன்ருய் நின்ருய் போற்றி' என்று ஆகாயத்தில் ஆண்டவன் ஒலி வடிவாகத் திகழ்ந்து அருள்பாலிக்கிருன் என்று சொல்லியிருக்கிருர்கள்.

நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என்னும் ஐம் பூதங்களில், எவ்வாறு ஆகாயம் என்ற பூதம், மற்ற நான்கு பூதங்களிலும் விரவி நின்று, தன்னில் யாருமில்லாத தனிப் பெரும் பூதமாக இருக்கின்றதோ, அதேபோல, இறைவனும் தான் எல்லாவற்றிலும் கலந்திருந்தாலும், தன்னில் யாரு மில்லாத தனிப்பெரும் ஜோதியாகத் திகழ்கின்ற தன் மையை, சதாசிவம் எனப்படும் இலிங்கம் உணர்த்துவ தாகும். அதன் பெருமையையும், அருமையையும், அறிந்த வர்கள் மட்டுமே உணர்ந்து கொள்ளக்கூடியதாகும். அம்

மூர்த்தம் வேறு எம்மதத்திலும் காணமுடியாத, உண்மைத் தத்துவங்களைக் கொண்ட அரிய திரு மூர்த்தமாகும். அது மட்டுமல்ல.

## 29. சிவலிங்கத்தில் பிரம்ம, விஷ்ணு, சிவ பாகங்கள் ஆகிய மூன்றும் அமைந்திருப்பது.

சிவலிங்கம் மூன்று கூறுகளுடையன. அடிப்பாகம் நாற்கோணவடிவமாய் பூமிக்கு அதிபதியான, சிருஷ்டிகர்த்தாவான பிரம்மபாகத்தை உணர்த்துவதாகும். மத்திய பாகம் எட்டுப் பட்டமுடைய அட்டகோணவடிவமாய், வாமை, சேஷ்டை, ரௌத்திரி, காளி, கலவிகரணி, பலவிகரணி, பலப்பிரதமனி, சர்வபூததமனி என்னும் மகா விஷ்ணுவின் எட்டு சக்திகளும், அதனோடு பொருந்த இருக்கும் ஆவுடை எனப்படும் மனோன்மணியாகிய ஒன்பதாவது சக்தியும் சேர்ந்து மகாவிஷ்ணுவின் நவசக்திகளாகி, நீருக்கு அதிபதியான காத்தல் எனப்படும் 'ஸ்திதி' கர்த்தரான விஷ்ணு பாகத்தை உணர்த்துவதாகும். அரன் என்பதன் பெண்பாலே அரி என்பதாகும். அதனாலேயே 'அரியல்லால் தேவியில்லை ஐயன் ஐயாரனார்க்கே', என்று திருநாவுக்கரசு நாயனாரும், திருமழிசையாழ்வார் தமது இயற்பாவிலே 'மாதாய மாலவனை மாயவனை' என்றும் அருளிச் செய்திருக்கின்றார்கள். அதனால்தான் நமது அப்பனாகிய சிவபெருமானது இடப்பாகம், நமது அம்மையாக விளங்கும் மகா விஷ்ணுவின் பாகமாகவும், மாதொரு பாகன், உமாமகேஸ்வரன், அர்த்தநாரி, சங்கர நாராயணன், என்ற ஆணும் பெண்ணும் சேர்ந்த அபூர்வ மூர்த்தங்களாகவும், அமைந்து திகழ்கின்றன. அதற்கு மேலுள்ள பாகம் நெருப்பிற்கு அதிபதியும், அழித்தல் எனப்படும் சம்ஹாரம், மறைத்தல் எனப்படும் த்ரௌபவம், அருளல் எனப்படும் அனுக்கிரஹம் ஆகிய முத்தொழில்களுக்கும் அதிபதியான சிவபாகமாகும். பூமிக்கு அதிபதியான பிரம்மபாகம் பூமிக்குள் மறைந்து ஒடுங்கி நிற்கும். நீருக்கு அதிபதியான

விஷ்ணுபாகம் அபிஷேக நீரைத்தாங்கி விரிந்து நிற்கும். நெருப்புக்கு அதிபதியான சிவபாகம் மேலோங்கி ஜோதி போன்று ஜொலித்துக் கொண்டிருக்கும். இம்மூன்றும் சேர்ந்த அருவமும், உருவமுமற்ற ஆதியும், அந்தமும் இல்லா அரும்பெரும்ஜோதி வடிவே சிவலிங்கம் ஆகும். ஆகவே சிவலிங்கத்தை வழிபட்டால் பிரம்மாவை வழி பட்ட பலனும், மகா விஷ்ணுவின் பத்துத் திரு அவதாரங் களை வழிபட்ட பலனும், சிவ பெருமானின் 25 மூர்த்தங் களை வழிபட்ட பலனும் ஒருங்கே கிடைக்கக் கூடியதாக வும், இருக்கிறதென்பதை வேதாகமங்கள் வலியுறுத்துகின் றன. புராண இதிகாசங்களும், அனுபூதிமான்களது அனு பவங்களும், அந்த உண்மையை உறுதிப் படுத்துகின்றன. அரசமரம் சுற்றிவரும் அன்பர்கள், சைவர்களாக இருந்தா லும், வைணவர்களாக இருந்தாலும், எல்லோரும் ஒன்று போல் சொல்லிவரும் 'மூலதோ பிரஹ்ம ரூபாய, மத்தி யதோ விஷ்ணுரூபிணி, அக்ரஹ்த சிவரூபாய, விருக்ஷ ராஜா யதே நம;, என்ற மந்திரமும் சிவலிங்க தத்துவத்தின் உண்மையை நன்ருக வலியுறுத்துகிறதல்லவா? அல்லா மலும் உலகிலுள்ள எல்லா மரங்களும், அவற்றின் விதை களும், கனிகளும், எல்லா வகையான முட்டைகளும், ஜீவ ராசிகளின் தலைகளும், பிண்டங்களும், பூமியும், சந்திரனும், சூரியனும், நக்ஷத்திரங்களும், அண்டங்கள் பலவும், ஆகாய மும், சிவலிங்க வடிவின் மேல்பாகம்போல் அமைந்திருப் பது சிந்திக்கத்தக்கது.

பலவிதமான தெய்வ வழிபாடுடைய இந்துக்களில் பலருக்கும், எந்த மூர்த்தியை வழிபட்டால் எல்லா மூர்த்தி களையும் வழிபட்ட பலனைப் பெறலாம் என்பது தெரியா திருக்கிறது. அதைப் பலரும் அறியும்படி தெரிவிக்கவே, சிவன் கோயில்களில் மூலஸ்தானத்தில் சிவலிங்கத்தைத் தவிர வேறு பிரதிஷ்டை ஒன்றுமின்றி அமைத்துக் காட்டி இருக்கின்றனர் நமது முன்னோர்கள்.

## 30. சி வ லி ங் க வழிபாட்டினுலேயே பிரம்மஹத்தி தோஷம் நீங்குவதாகும்.

மேலும் பாவங்களிலெல்லாம் மிகவும் கொடியது பிரம்மஹத்தி தோஷம் எனப்படும் மனிதரைக் கொன்ற கொலைப் பாவம். அதை நீக்க வேண்டுமாஞல் தனியாக எந்த மூர்த்தியையும் வழிபட்டு, நீக்கிக் கொள்ள முடியாது என்பது வேதாகம விதி. அதை நீக்க வேண்டுமாஞல் சிவலிங்க பூஜையே செய்தாக வேண்டும். அதனுலேயே திருவிளையாடல் புராணத்தில், பஞ்சமா பாதகம் செய்தவனுக்கும் மதுரை மீனுக்ஷி சுந்தரேஸ்வரர், அவன் செய்த பாவங்களை மன்னித்து, நற்கதி கொடுத்ததாகக் காண்கிறேம். காஞ்சீபுரத்தில் அம்மையார் சதாவும் இலிங்கபூஜை செய்து கொண்டிருப்பது யாவரும் அறிந்ததே. மகாபாரதத்தில் பஞ்ச பாண்டவர்களும் சிவபூஜா துரந்தரர்களாக இருக்க, அர்ஜுனன் சிவபெருமானிடமிருந்து பாசுபதம் பெறுவதற்கு விசேஷத் தவம் புரிந்தது யாவரும் அறிந்ததே. இராமாயணத்தில் இராவண சம்ஹாரத்திற்குப் பிறகு, ஸ்ரீ இராமபிரான் இராமேஸ்வரத்தில் இராமநாதரை சிவலிங்கத்தில் பிரதிஷ்டை செய்து வழிபாடாற்றியதும், ஹனுமார் தனியாகக் காசியிலிருந்து இலிங்கம் கொண்டு வந்து, பிரதிஷ்டை செய்து வழிபாடாற்றியதும் காணலாம். கந்த புராணத்தில் சூர சம்ஹாரத்திற்குப் பிறகு ஸ்ரீ சுப்பிரமணியப் பெருமான் திருச்செந்தூரில் சிவபூஜை செய்து கொண்டிருப்பதைக் காணலாம். கஜமுகாசூரனைச் சம்ஹாரம் செய்த பிறகு ஸ்ரீ விநாயகப் பெருமான் திருச்செங்காட்டங்குடியில் சிவலிங்கபூஜை செய்து கொண்டிருப்பதைக் காணலாம். மேலுலகத்தில் அதிகாரம் பெற்ற சகலருமே சிவபூஜை செய்தே அவ்வப்பதவிகளைப் பெற்றிருப்பதாக, நமது நாயன்மார்களும் மாணிக்க வாசகரும் அருளிச் செய்திருக்கிற தேவார திருவாசகங்களையும் உற்று நோக்குக:—

(1) திருஞானசம்பந்தர் — திரு இராமேச்சுரம்

தேவியை வவ்விய தென்னிலங்கைத் தசமாமுகன்
பூவியலும் முடிபொன்றுவித்த பழி போயற
ஏவியலுஞ் சிலையண்ணல் செய்த விராமேச்சுரம்
மேவிய சிந்தையினர்கள்தம்மேல் வினை வீடுமே.

(2) சுந்தரர் — திருக்கச்சியேகம்பத் திருப்பதிகம்.

ஆலந்தானுகந் தமுது செய்தானை யாதியை யமரர்
தொழுதேத்தும்
சீலந்தான் பெரிதும் உடையானை சிந்திப்பாரவர்
சிந்தையுளானை
ஏலவார் குழலாளுமை நங்கை யென்றும்ஏத்தி
வழிபடப் பெற்ற
காலகாலனைக் கம்பனெம்மானைக் காணக் கண்ணடி
யேன் பெற்றவாறே.

(3) சுந்தரர் — திருப்புன்கூர்.

இயக்கர் கின்னரர், யமனொடு வருணர்
இயங்கு தீவளி ஞாயிறு திங்கள்
மயக்கம் இல்புலி வானர நாகம் வசுக்கள்
வானவர் தானவரெல்லாம்
அயர்பொன்றின்றி நின் திருவடியதனை
அர்ச்சித்தார் பெறும் ஆரருள் கண்டு
திகைப் பொன்றின்றி நின் திருவடியடைந்தேன்
செழும்பொழிற் திருப்புன் கூருளானே.

(4) திருநாவுக்கரசர் — திருப்பூவனூர்.

நாரணன் னொடு நான்முகன் இந்திரன்
வாரணன் குமரன் வணங்குங் கழல்
பூரணன் திருப்பூவனூர் மேவிய
காரணன் எனை ஆளுடைக் காளையே.

(5) மணிவாசகர்.

பங்கயம் ஆயிரம் பூவினிலோர் பூக்குறையத்
தன்கண் இடந்து அரன் சேவடி மேற் சாத்தலுமே
சங்கரன் எம்பிரான் சக்கரம் மா லுக்குஅருளியவா று
எங்கும் பரவிநாம் தோணேக்கம் ஆடாமோ.

இவ்வா று நமது நாயன்மார்களும் சமாயாச்சாரியார் களும் அருளி இருக்கின் ற தேவார திருவாசகங்களில், ஒரு பாடலாவது விநாயகப் பெருமா னுக்கோ, முருகப்பெருமா னுக்கோ, அம்பாளுக்கோ, வே று யாருக்கோ பாடப் பெருமல், எல்லாப் பாடல்களும் சிவபரம் பொருளுக்கே பாடப் பெற்றிருப்பதும், மற்றவர்களெல்லாம் (ஸ்ரீ விநா யகர், முருகப் பெருமான், அம்பாள்) சிவபரம் பொரு ளேயே வழிபடுவதாக அமைந்திருப்பதும், ஆழ்ந்து சிந்திக் கத் தக்கதாகும்.

ஆகவே இம்மண்ணுலகத்திலுள்ள நாம் மேலே சொன்ன ஏதாவது ஒரு வடிவத்தில் ஒரு சிலேயைச் செய் வித்து, அதற்கு வேதாகமங்களில் சொன்ன முறைப்படி ஆவாகனம், ஸ்தாபனம், சந்நிதானம், சந்நிரோதனம் முதலிய கிரியைகளேச் செய்து, அதில் அந்த மூர்த்தியை எழுந்தருளியிருக்கும்படி வேண்டிக் கொண்டால், முன்னே வெறும் சிலேயாக இருந்த ஒன்றில், முருகப் பெரு மான், நடராஜப் பெருமான், விநாயகப் பெருமான் என்ற அந்தந்தச் சிறப்புப் பெயர் பெற்று, அந்தந்த மூர்த்தத்தில் என்னென்ன அதிகாரம் செலுத்திஞர்களோ, அந்தந்த அதி காரத்திற்குரிய அதிகாரமூர்த்தியாக, வேதாமச் சட்டப்படி எழுந்தருளியிருந்து, வணக்கத்திற்குரியவராகின்றனர். அந்த மூர்த்திகளுக்குச் செய்கின்ற சகல காரியங்களும், முழு முதற் பரம்பொருளாகிய ஆண்டவனல் அங்கீகரிக்கப் பெற்றதாகும். அவை மக்களால் ஏற்றுக் கொள்ளப் பெற்ற தாகவும் இருப்பதால், அதிலிருந்து முன் சாதாரணமாக

இருந்த கற்சிலைகள் இப்பொழுது அந்தந்த மூர்த்திமான்கள் வீற்றிருக்கின்ற திருமேனிகளாக மாறி. நாம் செய்யும் சிறப்பு மரியாதைகளையும், சிறப்பு உபசாரங்களையும், வணக்கங்களையும், வேண்டுகோள்களையும் ஏற்று, அதற்குரிய அனுக்கிரகங்களைச் செய்யக்கூடிய மூர்த்தங்களாக அமைகின்றன. இதற்கு ஒரு மனிதனை உபமானமாக வைத்துப் பார்ப்போமானால், உயிரில்லாத வெற்றுடம்பிற்கும், உயிருள்ள ஒரு தனி நபருக்கும் உள்ள வேற்றுமை எவ்வளவோ, அதைவிடப் பன்மடங்கு உள்ளதாகும், வெறுங் கற்சிலைக்கும் பிரதிஷ்டை செய்த மூர்த்திக்கும் உள்ள வேற்றுமை.

## 31. விழாக்களின் விளக்கம்.

விண்ணுலகில் நடைபெறுகின்ற ஒவ்வொரு வைபவமும், திருநாளும், அதற்குரிய கொண்டாட்டமும், இன்ன மாதத்திலே இன்னநாளிலே, இன்ன நக்ஷத்திரத்திலே, இன்ன விதமாக, இன்ன மூர்த்திக்கு நடைபெறுகின்றதென்பதை அறிந்துணர்ந்த நமது மூதாதைகள், அந்தந்த மாதத்தில், அந்தந்தத் திதியில், அந்தந்த நக்ஷத்திரத்தில் அதேவிதக் கொண்டாட்டத்தை அந்தந்த மூர்த்திக்கு நாமும் கொண்டாடி. ஆண்டவனுடைய திருவருள் பெற்று உய்யுமாறு அமைத்திருக்கிறார்கள். அவற்றை அறிவுறுத்தவே பஞ்சாங்கங்கள் எழுந்தன. அவற்றில் குறித்துள்ளபடி சூரியகிரகணம் சந்திர கிரகணம், அமாவாசை முதல் பௌர்ணமி வரை உண்டான திதிகள், நவக்கிரகங்களின் சஞ்சாரம், 27 நக்ஷத்திரங்களின் நிலை முதலியன ஏற்பட்டு வருவதைக் கண்கூடாகக் காண்கின்றோம்.

ஒரு சிறைச்சாலையிலுள்ளவர்கள், எவ்வாறு தங்களை சிறைச்சாலைக்கு வெளியிலிருந்து ஆண்டுவருகின்ற அதிகாரிகளின் பிறந்தநாளையோ, சுதந்திர நாளையோ, அல்லது வேறு முக்கிய நாளையோ கொண்டாடி வருவார்களோ,

அதேபோல பூலோகமாகிய சிறைச்சாலையில் வாழுகின்ற மக்கள், மேலுலகங்களில் ஆட்சி புரியும் அதிகாரிகளுக்கு நடைபெறுகின்ற வைபவங்களை, அந்தந்தத்தினங்களில், பஞ்சாங்கத்தில் அறிவித்திருக்கிறபடி கொண்டாடப் பெற்று வருவது, இந்து மதத்தைத் தவிர வேறு எந்த மதத்திலும் கிடையாது என்பதை யாவரும் அறிவர். இந்தியாவின் தலைநகராகிய டில்லியில், நமது பிரதமருக்குப் பிறந்தநாள் கொண்டாட்டமோ அல்லது இந்தியா சுதந்திரம்பெற்ற கொண்டாட்டமோ நடைபெறுமானால், அங்கு சென்று அதில் பங்கு கொள்ள முடியாத மற்றவர்களெல்லாம், அவரவர்களுடைய ஊர்களில் அதே தினத்தில், பிரதமருடைய படத்தை வைத்து அதற்குப் பூமாலை சூட்டி மரியாதை செய்வதும், சுதந்திர தினமானால் தேசியக் கொடிதனை நாட்டி, டெல்லியில் கொண்டாடுவதுபோல் தாங்களும் கொண்டாடி மகிழ்வதைத் தவிர வேறு ஒன்றும் செய்ய முடியாதல்லவா? அதேபோல பிரம்மலோகம், விஷ்ணு லோகம், சிவலோகம், முதலிய மேலுலகங்களில் படைத்தல், காத்தல், அழித்தலாகிய தொழில்களைச் செய்து நம்மை ஆண்டு வருகின்ற அதிபதிகளின், விசேஷ தினங்களை, அந்தந்த லோகத்திலுள்ள விண்ணவர்கள் நேரே கொண்டாடி இன்புறும்பொழுது, இம்மண்ணுலகிலுள்ள நாம் அவர்களின் படங்களுக்கும், விக்ரகங்களுக்கும், மரியாதைகள் செய்து கொண்டாடி மகிழாமல் வேறு என்ன செய்ய முடியும்?

## 32. எல்லாச் செயல்களும் ஆண்டவனால் அறியப் பெற்று, பதிவு செய்யப் பெறுபவை.

மதுரையில் கொண்டாடுகின்ற, தேசியக் கொண்டாட்டத்தை, நமது பிரதமர் டெல்லியிலிருந்து அறிந்துகொள்ள முடியாது. பத்திரிகைகள் வாயிலாகவும், ரேடியோ மூலமாகவும் அறிந்து கொள்ளக்கூடும். ஆனால் மேலுலகங்களிலுள்ள அதிகார மூர்த்திகளோ, யார், எந்தவிதத்தில்,

என்னவிதமாக எண்ணுகிருர்களோ, பேசுகிருர்களோ, செய்கிருர்களோ அவையனைத்தையும் அறியக்கூடிய ஆற்றல் உடையவர்களாகவும், அவற்றைப் பதிவுசெய்து, அவ்வவற்றிற்குரிய தீர்ப்புக் கொடுக்கக் கூடியவர்களாகவும் இருக்கிருர்கள். இன்றைய விஞ்ஞான முறையில் ஒருவர் பேசுவதை 'கிராமபோன்' தட்டுகளிலும், 'டேப் ரிக்கார்டர்' (Tape Recorder) முதலிய நவீன கருவிகளிலும் பதிவு செய்து வைத்து, அவற்றை நாமும், பின் சந்ததியாரும் கேட்கும்படி செய்யக்கூடுமாஞல், நம்மை ஆண்டு வரும் சர்வ வல்லமையுள்ள அதிபதிகளுக்கு எதுதான் முடியாது என்று சிந்தித்துப் பார்த்தல் வேண்டும்.

இறந்து போய் விட்டதாகக் கருதப் பெறுகின்ற நமது சுற்றத்தார்களும், நண்பர்களும், நாம் சொல்வதையும், செய்வதையும் தெரிய முடிகின்றதென்பதையும், இறந்தவர்களோடு பேசுகின்ற.பாக்கியம் பெற்றவர்களெல்லாம் உணர்வார்கள். சாதாரண சக்திவாய்ந்த மனிதர்களுக்கே அவ்வாறு செய்யக் கூடுமாஞல், முற்றறிவுடைய முழுமுதற் பரம் பொருளாகிய மூர்த்திக்கு, யார், எவ்வாறு, எவ்வுருவத்தில் ஆராதனை செய்தாலும் அதை அறிந்து, அருள்புரிகின்ற ஆற்றல் உண்டு என்பதை யார்தான் மறுக்க முடியும்?

### 33. விண்ணுலகத்தவர் மண்ணுலகத்திற்கு வந்து பேசுவதின் உண்மை:-

இறந்தவர்களோடு பேசும் முறையை வெற்றியுடன் கையாண்டு வருகிறவர்கள், உலகத்தில் எல்லாத் தேசங்களிலும், எல்லா மதங்களிலும் இருக்கிருர்கள் என்பதை, ஆங்கிலம் கற்றவர்கள் நன்கு உணர்வார்கள். புத்தர் பெருமானுக்கு, "புத்தர்" என்று பெயரிடப் பெற்றதும், ஏசுநாதருக்கு 'ஜீஸஸ்' என்ற பெயர் இடப்பெற்றதும், முகமது நபி நாயகம் திருக்குரானை அருளும்படி செய்யப் பெற்ற

தும், மேலுலக அறிவிப்புக்களாலேயே ஏற்பட்டன என்பதை அவரவர்களுடைய சரித்திரக் குறிப்புக்களிலிருந்து நன்கு தெரிந்து கொள்ளலாம்.

இறந்தவர்கள் விண்ணுலகத்திலிருந்து மண்ணுலகத்திற்கு வந்து இங்குள்ளவர்களின் துயரங்களைப் போக்கி, மகிழ்வித்ததற்குச் சான்றுகள் பல இருக்கின்றன. அவற்றில் மகா பாரதம் 15வது ஆசிரமவாச பர்வத்தில் திருதராஷ்டிரனும், காந்தாரியும், குந்தியும், வியாச பகவானும் வேண்டிக் கொண்டதன்பேரில், துரியோதனுதியர், கர்ணர், பீஷ்மர், துரோணர், கடோத்கஜன், அபிமன்யூ, இளம்பாண்டவர்கள், சகுனி, சிகண்டி, நால்வகைப் படையினேர் ஆகியோர் இம்மண்ணுலகிற்கு வந்து அவர்களை ஆசைதீரக் கண்டு, பேசி, ஆனந்தங்கொண்டார்கள் என்பதாகவும், பாண்டவர்களும் அவர்களைக் கண்டு பரமானந்தம் அடைந்ததாகவும் 18-வது சுவர்க்காரோகண பர்வத்தில் தருமர், இந்திரலோகங் காண்பதும், துரியோதனன், கர்ணன், அர்ச்சுனன் முதலியோரைக் கண்டதும், விண்ணுலகிலுள்ள ஸ்ரீ வைகுண்டத்தில் பல அதிசயங்களைக் கண்டதும், அப்பால் பரவாசுதேவன் எழுந்தருளியுள்ள வைகுண்ட நகரில் ஸ்ரீவைகுண்டநாதரைத் தரிசனம் செய்து மகிழ்ந்ததும், கவனிக்கத் தக்கன.

இனிக் கம்பராமாயணத்தில் தசரதச் சக்கரவர்த்தி, தான் இறந்து 14-ஆண்டுகள் கழித்து, சீதாப்பிராட்டியார் தீக்குழிப் பாய்ந்தபின், இம்மண்ணுலகிற்கு வந்து, ஸ்ரீராமபிரானுக்கு இரண்டு வரங்கள் கொடுத்து, விண்ணுலகு சென்றதும், சிலப்பதிகாரத்தில் கோவலன் வெட்டுண்டபின், அவ்வெட்டால் அவன் தன்னுடைய ஆவி உடலில் பழுது ஒன்றும் இன்றி எழுந்து, கண்ணகியின் கண்ணீரைத் துடைத்திருப்பதும், திருவிளையாடற் புராணத்தில் காஞ்சனமாலையம்மையாரை, இறந்து போன மலையத்துவச பாண்டியன், விண்ணுலகிலிருந்து இம்மண்ணுல

கிற்கு வந்து, அவளது கையைப்பற்றிக்கொண்டு சமுத்திர ஸ்நானம் செய்ததும் கவனிக்கத் தக்கன.

இறுதியாக பெரியபுராணத்தில் சுந்தர மூர்த்தி நாயனார், பரவையார், சங்கிலியார் ஆகிய மூவரும் திருக்கயிலாயத்தில் நிரந்தரமாகத் தொண்டு புரிந்து கொண்டிருந்ததில், ஒருவர் மனம் மற்றவர் மேல் செல்ல, அதன் காரணமாக இம்மண்ணுலகிற்கு அனுப்பப் பெற்று, தற்காலிகமாகக் கொடுக்கப் பெற்ற இம்மண்ணுலக வாழ்க்கையை அனுபவித்து முடிந்தபின், திரும்பவும் திருக்கயிலை போய்ச் சேர்ந்த விபரமும், அங்கு சிவபெருமானிடம் மாமுனிவர்கள் ''இவ்வாறு வெள்ளையானையின் மேல் சவாரி செய்து கொண்டு வருகின்றவர் யார்?'' என்று வினவ, நொடித்தான் மலை உத்தமனான சிவபெருமான் ''நம்தமர் ஊரன்'' என்றான் என்ற குறிப்பும், சுந்தரமூர்த்தி நாயனார் கைலாயத்தில் பாடிய திருப்பாடலும், சேரமான் பெருமாள் நாயனார் பாடிய திருவுலாவும், இம்மண்ணுலகிற்கு வந்த விபரமும், ஆழ்ந்து சிந்திக்கத் தக்கன.

இங்கு பக்தியுடனும், ஒழுக்கத்துடனும், தியாகவுள்ளத்துடனும் வாழ்ந்து வந்தால், இறந்தபின் அதே பெயருடன் ஆவி உடலோடு சென்று, விண்ணுலகில் கடவுளை நேரில் கண்டு தரிசிக்கலாம் என்பதற்கு சுந்தர மூர்த்தி நாயனார் திருவாய் மலர்ந்தருளிய தேவாரத்தில்

''மண்ணுலகிற் பிறந்து நும்மை வாழ்த்தும் வழியடியார்
பொன்னுலகம் பெறுதல் தொண்டனேன் இன்று கண்டொழிந்தேன்''

என்று கூறியிருப்பதும்,

"தம்மையே புகழ்ந்து இச்சை பேசினும்" என்ற தேவாரத்தில்

"அம்மையே சிவலோகம் ஆள்வதற்கு யாதும் ஐயுறவில்லையே"

என்று கூறியிருப்பதும்,

திருஞானசம்பந்தர்

"வானில் அரசாள்வர் ஆணை நமதே"
என்று கூறியிருப்பதும்,

திருநாவுக்கரசு நாயனர்

"ஊனில் ஆவி உயிர்க்கும் பொழுதெல்லாம்" என்ற தேவாரத்தில்

"வானில் ஆவி இருக்கவும் வைப்பரே" என்று கூறியிருப்பதும்,

திருவாசகத்தில்

"வேனில்வேள் மலர்க்கணைக்கும், வெண்ணகைச் செவ்வாய்க்கரிய
பானலார் கண்ணியற்கும் பதைத்துருகும் பாழ்நெஞ்சே
ஊனெலாம் நின்றுருகப் புகுந்தாண்டான் இன்று போய்
வானுளான் காணுய் நீ மாளா வாழ்கின்றுயே
என்றும்,

"காணலாம் பரமே கட்கு இறந்ததோர்
வானிலாப் பொருளே, இங்கு ஓர் பார்ப்பென
பாணனேன் படிற்று ஆக்கையை விட்டுனைப்
பூணுமாறு அறியேன் புலன் போற்றியே"
என்றும்,

''எய்த்தேன் நாயேன் இனி இங்கிருக்ககில்லேன்''

என்ற திருவாசகத்தில்

''மூத்தா உந்தன் முகவொளி நோக்கி முறுவல்
நகை காண
அத்தா சால ஆசைப்பட்டேன் கண்டாய்
அம்மானே''

என்றும் கூறியிருப்பதும், இன்னும் இக்கருத்துக் கொண்ட நூற்றுக் கணக்கான தேவார திருவாசகங்களும் சான்றும் தெளிவும் தருகின்றன.

திருவாய் மொழியில்,

''மாதவன் தமரென்று வாசலில் வானவர்
போதுமின் எமதிடம் புகுதுக மென்றலும்
கீதங்கள் பாடினர் கின்னரர் கெருடர்கள்
வேதநால்வாயவர் வேள்வியுள் மடுத்தே''

என்றும் நம்மாழ்வார் அருளியிருக்கிருர்.

34. விக்ரக ஆராதனை சம்பந்தமாக இறந்தவர்கள் அறிவித்துள்ள நமது சொந்த அனுபவச் சான்றுகள்.

கொழும்பில் 1943-ம் வருஷம் பங்குனி மாதம் உத்திர நட்சத்திரத்தன்று எமது நண்பர் டாக்டர் டீ. நல்லைநாதன் எல். ஆர். சி. பீ. லண்டன் எம். ஆர். சீ. எஸ். இங்கிலாந்து அவர்கள் (Dr. T. Nallainathan L. R. C. P. London M. R. C. S. England.) ஆவி உலகத்திலிருந்த திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் சுவாமிகளுடன் நம் சமய சம்பந்தமான சில சந்தேகங்களைக் கேட்கவேண்டுமென்று வந்திருந்தார்கள். நாங்கள் பேச ஆரம்பித்து ஞானியார் சுவாமிகளை அழைத்தபோது, பதில்வரக் கொஞ்சம் தாமத மாயிற்று. மேலுலகங்களிலுள்ள ஆவிகள் வேறு என்ன

செய்து கொண்டிருந்தாலும் மூன்று முறை அழைத்தால் கட்டாயம் வந்துவிடுவார்கள் என்பதை நாங்கள் முன்னரே அறிந்திருந்ததால் மூன்று முறை ஞானியார் சுவாமிகளை அழைத்தோம். அவர்கள் வந்து "இன்று பங்குனி உத்தி ரம் என்பது தெரியுமா? இங்கு நடராஜப் பெருமான் நடனம் புரியும் நாள்; விசேடமாகப் பூசை செய்கின்ற நாள்; இன்று பேச முடியாது; வருகிறோம்" என்று சொல்லிப் போய்விட்டார்கள். அது சமயம் அங்கு வீற்றி ருந்த எவருக்கும் அன்று பங்குனி உத்திரம் என்பது தெரியாது. பஞ்சாங்கத்தைப் பார்த்தபோது அது சரியாக இருந்தது. இது போன்று, பல தடவைகளில் மேலுலகங் களில் நடைபெற்ற விசேஷங்களை ஆவி உலகத்திலுள்ள அன்பர்கள் அறிவித்திருக்கிறார்கள். பஞ்சாங்கத்தைப் பார்த்தால் அவையெல்லாம் சரியாக இருக்கின்றன. சதுர்த்தி தினத்தன்று இப்புவனத்திற்கு அதிபதியாகிய ஸ்ரீகண்டருத்திரர் விநாயகராகக் காட்சி கொடுப்பதும், கிருத்திகையன்று முருகப் பெருமானைக் காட்சி கொடுப்ப தும், ஸ்ரீ வைகுண்டத்தில் மகா விஷ்ணு காட்சி கொடுப்ப தும், பிரம்ம லோகத்தில் பிரம்மா காட்சி கொடுப்பதும், அவ்வப்புவனங்களில் அடியார்கள் பலர் வாழ்ந்து வருவ தும், கோயில்களில் நடைபெறுகின்ற விசேட வைபவங் கள் எல்லாம் மேலுலகங்களின் சின்னங்களாகவே அமைந் திருக்கின்றன என்பதும் அறிவிக்கப் பெற்றன.

## 35. விக்ரக ஆராதனை சம்பந்தமாக ஆங்கிலேயர் களில் இறந்தவர்கள் கொடுக்கின்ற சான்றுகள்.

ஆங்கிலம் படித்த எங்களுக்கு மேலுலகங்கள் சம் பந்தமாகவும், அங்குள்ள அதிபதிகள் சம்பந்தமாகவும், ஆங்கிலேயர்களில் ஆவி உலகத்தோடு தொடர்புடையவர் களின் கருத்துக்கள் இதற்கு மாறுபட்டிருக்கின்றனவா? அல்லது ஆவி உலகத்திலுள்ள இந்துக்கள் சொல்வன வற்றை வலியுறுத்துகின்றனவா? என்று அறிய வேண்டு

மென்ற எண்ணம் உண்டாயிற்று. ஆகவே ஆங்கிலேயர் களுடைய ஆவி உலக அனுபவங்கள் அடங்கிய அநேக புத்தகங்களைப் பார்வையிட்டோம். எல்லோருடைய அனுபவங்களும் ஒன்றை ஒன்று உறுதிப் படுத்துகின் றனவே தவிர மாறுபட்டனவாக இல்லை. உதாரணமாக சிலவற்றை இங்கே குறிப்பிடுகின்றோம். 1874 முதல் 1918-ம் வருடம் முடிய இங்கிலாந்தில் ஆவி உலகத்தோடு பேசியவர்கள் வெளியிட்ட 19 முக்கியப் புத்தகங்களி லிருந்து (HEROLD BAILEY) ஹேரோல்டு பெய்லி என்பவர் 1918-ம் வருஷத்தில் "THE UNDISCOVERED COUNTRY"-(A sequence of spirit messages describing Death and the After World) "கண்டுபிடியாத பிரதேசம்" மரணத்தையும், மரணத்திற் குப் பின்னுள்ள உலகத்தையும் அறிவிக்கின்ற ஆவி உலக அறிவிப்புகளின் தொகுப்பு, என்ற 270 பக்கங்கள் கொண்ட புத்தகத்தை வெளியிட்டிருக்கிறார். அதில் குறிப் பிட்டிருக்கிற 19 புத்தகங்களும் 1876 முதல் 1918 வரை வெளியானவை. ஒவ்வொன்றும் நூற்றுக்கணக்கான பக் கங்கள் கொண்டவை.

அந்தப் புத்தகத்தில் 142-ம் பக்கத்தில் "எல்லா வாழ் வும் எல்லா அபிவிருத்தியும் ஆவிரூபத்திலுள்ள ஆட்சி யாளர்களின் ஆணைகளின் வண்ணம் அடங்கி நடக்கும் ஆன்மீக சக்தியுள்ள அறிவுடையோர்களின் தொழிற்பாட் டாலேயே நிகழ்கின்றன. இதைக் கிரகித்து விளங்கிக் கொண்டால் அறிவற்ற சக்தியின் தொழிற்பாடு என்பது நீங்கிவிடும். கருத்து என்பது அதில் பதில் இடம்பெறும். அந்தக் கருத்தும் சில சட்டதிட்டங்களுக்கு உட்பட்டு, அவற்றோடு பொருந்த நடத்திவரும் சுதந்திரமும், பேராற்ற லும், அறிவும், அதிகாரமும் வாய்ந்த பல்வேறு தரமுள்ள ஆத்மீக ஆணையாளர்களிடமிருந்து வெளிப்படுவதாகும்" என்று கூறுகிறது.

147-ம் பக்கத்தில் "இவர்களெல்லாம்"(ஆத்மீக ஆணையாளர்) பலதரப்பட்ட அதிகாரம் உள்ளவர்களாகவும், பலவகையினராகவும் இருக்கிறார்கள். மேலும் அவர்கள் ஒரே தன்மையிலும், ஒரே ரூபத்திலும் இல்லை. ஆனால் அவர்களுடைய தொழில் அவர்களுக்கு மேல் உள்ளவர்களின் கட்டுப்பாட்டுக்கு உட்பட்டதாக இருக்கிறது.

பூவுலகத்திலே பல விக்ரக வழிபாடு செய்கிறவர்கள் இருக்கிறார்களே, அவர்களது கடவுள்களைப் பற்றி என்ன என்று கேட்கிறீர்கள்? "அவ்விக்கிரகங்களின் உண்மைக் கர்த்தாக்கள் இங்கே (மேலுலகத்தில்) இருக்கின்றனர்" ஆச்சரியப்பட்டு "என்ன" என்று திரும்பவும் கேட்கிறீர்கள். மனிதன் தன்னுடைய கற்பனையினால் தெய்வங்களுக்கு உருவங்கள் அமைத்து, விக்கிரகங்களாகக் கற்பித்திருந்தால், கண்ணுக்குத் தெரியாத மேலுலகங்களில் அந்தந்த மூர்த்திகள் அதிகாரம் செலுத்திக் கொண்டிருக்கின்ற அந்த நிலைமையையும் மனிதன் கொடுக்க முடியுமா? முடியாதல்லவா? அவ்வடிவில் உள்ளவர்கள் இங்கு (மேலுலகத்தில்) இருக்கின்றவர்களே. மனிதன் வெகு காலத்திற்கு முன்பே, தன்னுடைய சொந்த மானதக் காட்சியினாலும், ஆவி உலகத் தொடர்பினாலும், அவர்களை அறிந்திருந்தான். மனிதன் அவர்களின் உருவங்களை உண்டாக்கவோ, சிருஷ்டிக்கவோ இல்லை. மனிதனே சிருஷ்டித்திருக்கின்றான் என்று சொல்கின்ற பூவுலகத்தவர், வாழ்வின் சட்டதிட்டங்களை அறியாதவராவர். மனிதனே-அதிலும் பண்டைக்காலத்து மனிதனே-ஆவி உலகத்தவரோடு கொண்ட உறவினாலும் நெருங்கிய தொடர்பினாலும் இவற்றைத் தெரிந்து கொண்டான்".

இந்தத் தெய்வம் அந்தத் தெய்வம் என்றெல்லாம் பழைய காலத்துக் கதைகளைப் படிக்கும் பொழுது, நீங்கள் உண்மையை உணர்ந்த மெஞ்ஞானிகள் வாழும்

படியான காலத்தில் வாழ்கின்ற அதிர்ஷ்டம் பெற்றிருப்பதாக எண்ணிக் கொண்டு, பண்டைக் காலத்து மக்கள் கட்டுக் கதைகளை நம்பிக் கொண்டிருந்த அஞ்ஞானிகள் என்று பேசிக் கொண்டிருக்கிறீர்கள். ஆனால் அந்தப் பழங்கதை சொல்கின்ற பண்டைக் காலத்தவரே உண்மையில் மெஞ்ஞானிகள் ஆவார்கள். ஏனென்றால் அவர்கள் தான் பூவுலகத்திலிருந்து கொண்டே மேலுலகங்களிலுள்ளவற்றைப் பார்க்கவும், பார்த்தவற்றைப் பதிவு செய்து கொள்ளவும், தலைப்பட்டவர்கள்.

இயற்கைச் சட்டங்களைப் பற்றி அதிகமாகக் கேள்விப்படுகிறோம் அந்தச் சட்டங்களை நிறைவேற்றுகின்றவர்கள் யார் தெரியுமா? "இயற்கைச் சட்டம்" என்ற பதம் ஒவ்வொரு மனிதனுடைய வாயிலும் தொனிக்கின்றது. ஆனால் இவ்வுலகச் சட்டங்களை நிறைவேற்றும் நிர்வாக அதிகாரிகள் இவ்வுலகத்தில் இருப்பதுபோல, மேலுலகங்களிலும் இயற்கைச் சட்டங்களை நிறைவேற்றும் நிர்வாக அதிகாரிகள் இருக்கிறார்கள் என்று குறிப்பிட்டிருக்கின்றது. (குறிப்பு) இயற்கை என்பது ஆண்டவனையே குறிக்கின்ற ஒரு பதமாகும். அதனாலேயே மாணிக்க வாசகப் பெருமான்,

"வேறு வேறு உருவும் வேறு வேறு இயற்கையும்
நூறு நூறு ஆயிரம் இயல்பினதாகி ஏறுடையீசன்"

என்று கூறியிருக்கிறார்.

161-ம் பக்கத்தில் "இந்த உலகமானது பற்பல உலகங்களால் சூழப்பட்டு, அவ்வுலகங்களிலுள்ள பலதரப்பட்ட அதிகாரமும், பல்தரமான பொறுப்பும் வாய்ந்த, அதிகாரிகளின் ஆணைக்கு உட்பட்டதாக இருக்கிறது. அந்த அதிகாரமும், பொறுப்பும், முழுமுதல் சிருஷ்டி கர்த்தாவால் கொடுக்கப் பெற்றதாகும்" என்று குறிப்பிட்டிருக்கிறது.

181-ம் பக்கத்தில் "மேலுலக அறிவிப்புகளின் உண்மையை உள்ளவாறு வெளிப்படுத்துகின்ற பழைய காலத்துக் கதைகள் இந்தியாவிலேயே தோன்றின." என்று குறிப்பிட்டிருக்கிறது. 182-ம் பக்கத்தில் "எகிப்து (Egypt) பெர்ஸியா (Persia) கிரீஸ் (Greece) ரோம் (Rome) முதலிய நாடுகளும், உலகிலுள்ள பிற புகழ் பெற்ற பிரதேசங்களும், தங்கள் தங்களுடைய மதக் கோட்பாட்டிற்கும், தத்துவ ஆராய்ச்சிக்கும், இந்தியாவிற்குப் பெரிதும் கடமைப் பட்டதாகும்" என்று குறிப்பிடப் பெற்றிருக்கிறது.

## 36. இறந்துபோன புண்ணிய சீலர்களும், ஆண்டவனும் நமக்கு அருள்பாலிக்கும் முறைமை.

இறந்துபோன நமது சுற்றத்தார்களெல்லாம் நமது சாதாரணக் கண்களுக்குத் தெரியாத ஆவி உடலோடு (சூக்கும சரீரத்தோடு) இருக்கிறார்கள் என்றும், அவர்களில் பாவம் செய்யாத புண்ணியசீலர்கள், அங்குள்ள இருள் உலகை அடையாமல், அருள் உலகை அடைந்து இருப்பதனால், நாம் அவர்களை நினைத்தால், அவர்கள் உடனே நம்மிடம் வந்து, நாம் கேட்பதையும், செய்வதையும், எண்ணுவதையும் தெரிந்து, அறிவுடைய பதில், அன்புடைய பதில், பயனுடைய பதில் கொடுக்கிறார்கள் என்றும் நிரூபிக்கப் பெற்ற பின்னரும், அவர்களுக்குரிய உருவத்தை வைத்து மரியாதைகள் செய்தால் சாதாரணமாக நமது கண்ணுக்குத் தெரியாத அவர்கள் அந்த உருவத்திலிருந்து அதை ஏற்றுக்கொண்டு, அருள்பாலிக்கமுடியும் என்பதை யாரும் மறுக்கவோ, பகுத்தறிவுக்குப் பொருத்தமற்றது என்று சொல்லவோ முடியுமா?

இறந்துபோன மனிதர்களே நாம் செய்கின்ற காரியங்களை அறியக்கூடியவர்களாக இருக்கிறார்கள் என்பது நிரூபிக்கப் பெற்ற பின்னரும், மேலுலகங்களிலிருந்தும், விக்ர

கங்களில் வீற்றிருந்தும் நம்மை ஆட்சி புரிந்து வருகின்ற மூர்த்திகள், நாம் செய்கின்ற சகல காரியங்களையும், தெரிந்து பதிவு செய்து கொள்ள முடியும் என்பதில் யாருக்கும் சந்தேகம் இருக்க முடியுமா? உலகத்திலுள்ள விஞ்ஞானிகள் நாம்பேசுவதை "டேப் ரிக்கார்டர்" (Tape Recorder) மூலம் பதிவு செய்து திரும்பவும் கேட்கும்படி செய்யக் கூடுமாகுல், விண்ணுலகிலுள்ள மெஞ்ஞானிகளுக்கு அது சாத்தியப் படாமலிருக்க முடியுமா?

## 37. தெய்வ நிந்தனையினுல் வரும் கேடு.

ஆலயங்களில் பிரதிஷ்டை செய்யப் பெற்ற மூர்த்திகளின் அருமை பெருமைகளை உணராமல் ஏளனம் செய்கிறவர்களும், அவமரியாதை செய்கிறவர்களுமே, தரித்திரர்களாகவும், அங்க ஈனர்களாகவும், ஊமைகளாகவும், குருடர்களாகவும் மறு ஜென்மத்தில் பிறக்க வேண்டியவர்களாகின்ருர்கள் என்பது வேதாகமத் துணிபு. ஒரு வியாதியைக் குறித்து ஏதாவது ஒரு மூர்த்திக்கு ஒன்று நேர்ந்து கொண்டால், அவ்வியாதி நீங்கிவிடும். என்னபாடு பட்டும், நேர்ந்து கொண்டவன் அந்தக் கடனைச் செலுத்திவிடுவதும் எல்லோருக்கும் அனுபவமானதேயாகும். அப்படிச் செலுத்தாவிட்டால் குடும்பங்களில் பலவித அல்லல்கள் விளைவதும் யாவரும் அறிந்ததேயாகும். "அரசன் அன்று கேட்பான் தெய்வம் நின்று கேட்கும்" என்பது பழமொழியாக இருந்தாலும், பலரும் அறியக் கொலை செய்த ஒருவன், தூக்குத்தண்டனை அடையுமட்டும், மற்றவர்கள் போலவே வாழ்கின்ருன் என்பதை அறிவோம். அப்போதைக்கப்போது நியாயம் செலுத்த வேண்டிய அரசனும், ஒரு சட்டப்படி குற்றவாளிக்குக் கொடுக்க வேண்டிய அறிவிப்பு, அவகாசம், நியாயவிசாரிப்பு முதலிய நியதிக்கும், நிர்ணயத்திற்கும் உட்பட்டு நடக்க வேண்டியதிருக்கிறது. அதுபோலவே தெய்வமும், காலம், நியதி எனும் சட்ட திட்டங்களை

அமைத்தே, அதன்படி வினைப்பயன்களை அனுபவிக்கச் செய்கின்றது.

ஒரு சிறைச்சாலைக்குள் கல்லை உடைத்துக் கொண்டிருக்கும் கைதிகளில் ஒரு மூர்க்கன், "இந்த அரசாங்கம் ஒழிக, இந்த மந்திரி ஒழிக," என்று என்னதான் ஏசினாலும், பேசினாலும், அதற்காக நமது அரசாங்கமும், மந்திரிமாரும் ஏதும் நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளாமல், அந்தக் கைதி வெளியே வந்தபின் நடக்கிற நடப்பைப் பொருத்தே, திரும்பவும் முன்னைவிடக் கடுமையான தண்டனை கொடுக்கப் பெறும் என்பதை யாவரும் அறிவர். அதுபோலவே இப்பூலோக சிறைச்சாலையிலுள்ளவர்கள், தெய்வ நிந்தனை செய்தாலும், விக்ரகங்களையும், விக்ரக ஆராதனையையும் பழித்துப் பேசினாலும், அத்தெய்வம் உடனே இப்பூலோகத்திற்கு வந்து நாக்கைத் துண்டித்து விடாது. இப்பூலோக வாழ்க்கை முடிந்தபின், மறுதண்டனை கொடுக்கும்பொழுதுதான் அதற்குரிய பலனும் சேர்த்துக் கிடைக்கும். ஆனதினாலேயே தெய்வ நிந்தனை நம்மை உடனே ஒன்றும் செய்யவில்லையே என்று எண்ணி, தெய்வ நிந்தனை செய்வதும், விக்ரக ஆராதனையின் மேன்மையையும், உண்மைத் தத்துவங்களையும் ஒரு சிறிதும் விளங்கிக் கொள்ளாதவர்கள் அதனைப் பழிப்பதும், எள்ளி நகையாடுவதும் அறிவுடைமையாகாதது மட்டுமல்லாமல், அது தெய்வ அபராதத்திற்கும், அதற்குரிய தண்டனைக்கும் நம்மை ஆட்படுத்துகின்ற கொடியதோர் பாவச் செயலாகும் என்பதும் மறுக்க முடியாத உண்மையாகும்.

## 38. சைவ வைஷ்ணவச் சின்னங்களின் விளக்கம்.

இவ்வுலகில் பக்தியுள்ளவர்களும், ஒழுக்கமுள்ளவர்களும், தியாகவுள்ளம் உள்ளவர்களும் விண்ணுலகம் சென்று, அங்கிருந்து இவ்வுலகை ஆண்டுவரும் நமது அம்மையப்பனாகிய ஆண்டவனை நேரில் காணலாம் என்

பது புலனாகும். அவ்வாறு சிவலோகத்திலிருக்கிற நமது அப்பனது முக்கிய அடையாளம் நெற்றிக்கண்ணும், நீல கண்டமும், திருநீறும் என்று கண்ட பெரியோர்கள், நன்றி விசுவாசத்துடன் நெற்றிக் கண்ணை நினைவு கொள்ள, சந்தனம், குங்குமம் அல்லது குங்குமமும் சந்தனமும் கொண்ட திலகமும், நீல கண்டத்தை நினைவு கொள்ள, கண்டத்தில் உருத்திராக்ஷமும், திருநீற்றை நினைவு கொள்ள, நெற்றியிலும் அங்கங்களிலும் திருநீறும், தரித்து அவைகளைத் தங்களது சமயச் சின்னங்களாகக் கொண்டார்கள். அதனாலேயே,

''கங்காளன் பூசும் கவசத் திருநீற்றை
மங்காமற்பூச மகிழ்வாரே யாமாகில்
தங்கா வினைகளும், சாரும் சிவகதி
சிங்காரமான திருவடி சேர்வரே'' திருமந்திரம் 1666.

என்று திருமூலரும், திருஞானசம்பந்தப் பெருமானார் ''வானவர் மேலது நீறு'' என்றும், ''மேலுறை தேவர்கள் தங்கள் மெய்யது வெண்பொடி நீறு'' என்றும், ''பராவணம் ஆவது நீறு பாவ மறுப்பது நீறு'' என்றும் அருளியிருக்கிறார்கள். வெகு நாட்களாக ஒரு கட்சியைச் சேர்ந்தவனுக்கு ஒரு தனி மதிப்பு உண்டு என்பது போல், நமது அம்மையப்பனது சின்னங்களை வெகு நாட்களாக அணிந்து வந்தால், அந்த ஒன்றாலேயே திருவடிப் பேறு கிடைக்கும் என்பது திருமூலர் கருத்தாகும்.

**39. திருநீற்றின் மகிமையைக் குறித்து கிறிஸ்தவ வேதப் புத்தகம் தரும் சான்று.**

திருநீறு கிடாரியின் சாணியிலிருந்து தயாரிக்கப்பெற வேண்டுமென்றும், அது தீட்டுக் கழிக்கும் சக்தியுடையதென்றும், அது பாவத்தைப் பரிகரிக்கும் என்றும், சுத்தத் தண்ணீரில் அதைப் போட்டு, தருப்பைப் புல்லைக் கொண்டு, பாளையத்தால் வெட்டுண்டவனையோ, செத்த

வனையோ, பிரேதக் குழியையோ, மனித எலும்பையோ, தொட்டதனுல் ஏற்பட்ட தீட்டைக் கழிப்பதற்காக மூன்ரும் நாளிலும், ஏழாம் நாளிலும், தெளிக்க வேண்டுமென்றும், கிறிஸ்தவ வேதப்புத்தகத்தில் பழைய ஏற்பாட்டில் எண்ணுகமம் 19 விரிவாகக் கூறுகின்றது. அதிலிருந்து பல்லாயிர வருஷங்களுக்கு முன் திருநீற்றின் பெருமையையும், அவசியத்தையும், இந்தியாவிற்கும், இலங்கைக்கும் வெளியே உள்ள நாடுகளில், மக்கள் உணர்ந்து உபயோகப் படுத்தி வந்திருக்கிருர்கள் என்பது புலனுகிறதல்லவா?

**40.. திருநீற்றின் தன்மையும், அதனைச் சைவ—வைஷ்ணவ பக்தர்கள் எங்கும், என்றும் போற்றிவரும் மாண்பும்.**

உலகத்திலுள்ள பொருள்கள் பலவற்றிலும் சாணி ஒன்றே, பிற நாற்றங்களைப் போக்கி, தொத்து நோய்க் கிருமிகளைக் கொன்று, தான் நாற்றம் ஒன்றும் கொடுக்காதிருக்கிறது. ஏனைய கிருமி நாசினிகளெல்லாம் விஷக் கிருமிகளைக் கொன்று, பிற நாற்றத்தைத் தன்னுடைய நாற்றத்தால் தெரியவிடாமல் செய்யுமே தவிர, உண்மையில் சாணியைப் போல் பிற நாற்றங்களைப் போக்கி, தானும் நாருதிருப்பதில்லை. விஷக் கிருமிகளைக் கொல்லும் ஆற்றல் சாணிக்கு இருக்கிறதா என்று யாரும் சந்தேகப்பட வேண்டியதில்லை. அவரைச் செடியில், பூச்சி விழுந்து விட்டால் எருக்கட்டிச் சாம்பலைத் தூவுவார்கள். அதனுல் பூச்சிகள் மாய்ந்து, செடியும் நன்ருக வளரும். சாணியின் பஸ்பமாகிய சாம்பலுக்கு, பெரிய புழுக்களையும் கொல்லக் கூடிய ஆற்றல் இருக்குமாஞல், சாணிக்கு விஷக் கிருமிகளைக் கொல்லும் ஆற்றலுண்டு என்பதை யாரும் மறுக்க முடியாதல்லவா? ஆகவே விபூதி எல்லாவிதத் தீட்டுக்களையும் போக்கி, அதை அணிகின்றவரது உடல் நாற்றத்தையும் போக்கித் தூய்மைப் படுத்துகிறது என்பதை சைவ சமயிகள் உணர்ந்தே, சுகாதார முறையிலும், ஆண்

டவனது சின்னமென்ற முறையிலும், நாமெல்லாம் முடிவில் ஒரு பிடி சாம்பலாவோம் என்ற நினைப்பை உணர்த்தக் கூடிய அடையாளம் என்ற முறையிலும், அணிந்து வருகிறார்கள். இந்த உண்மையை அறியாதவர்கள் ஏதேதோ பிதற்றுவது எவ்வளவு பேதமை என்பதை எண்ணிப் பார்க்க வேண்டும்.

பிரம்மலோகத்திற்கும் சிவலோகத்திற்கும் மத்தியிலுள்ள ஸ்ரீ வைகுண்டம் எனப்படும் விஷ்ணுலோகத்தில், மகா விஷ்ணுவும், அங்குள்ள தேவர்களும், அடியார்களும் நீற்றினாலேயே திருநாமம் போட்டிருப்பதாக அவர்களைக் கண்ட ஆவி உலகத்தவர்கள் அறிவித்திருக்கிறார்கள். அதனாலேயே விஷ்ணு பக்தர்கள் திருநாமம் போடக் காரணமாயிற்றென்று தெரிந்து கொள்ளல் வேண்டும்.

அது சம்பந்தமாக சூத சங்கிதையில்

"மால் அயன் இந்திரன் மற்றைய அமரர் மலர் மகளிர்
சசி மற்றை வானக்
கோல மடவார் இயக்கர் கந்தருவர் இராக்கர் குல
அசுரர் வேதச்
சீல முனிவரர் மற்றோர் இவருளரும் தவமுடையீர்
திரு வெண்ணீறு
சாலவும் உத்தூளனம் முப்புண்டரம் நாள் தோறும்
போற்றித் தரியார் யாரே."

என்று கூறியிருப்பதையும்,

கூர்ம புராணத்தில்

"கண்ணன் வெண்பூதி பூசிக் கண்டிகை மாலை
சாத்திப்—புண்ணியத்
திங்கள் வேணி யரனிருபாதம் போற்றி" — எனக்

கண்ண அவதாரத்திலும் கண்டிகையும் நீறும் அணிந்தனர் —என்று கூறியிருப்பதையும், வாயு சங்கிதையில் உத்தர

காண்டத்திலும், மகா பாரதத்தில் அநுசாசன பர்வத்தில் 14-ம் அத்தியாயத்திலும், கூர்ம புராணத்திலும், ஸ்ரீ கிருஷ்ணர் உபமன்யு மகா முனிவரிடம் சிவதீட்சை பெற்று சிவ பூஜை செய்து, தான் விரும்பிய பயனைப்பெற்றார்—என்று கூறியிருப்பதையும் உற்று நோக்குக.

மேலும் விஷ்ணுவும் அவர் அம்ச மூர்த்திகளும், சிவ சின்னங்களை அணிந்திருக்கிறார்கள் என்பதற்கும், சிவ சின்னங்களை அணிந்திருப்பவர்கள்மீது பிரியமுடையவர்களாக இருந்திருக்கிறார்கள் என்பதற்கும், கீழ்க்கண்ட மேற்கோள்கள், சான்று பகர்கின்றன.

காளிகா கண்டச்சுலோகத்தில்:

"நாராயண ஸ்தபஸ்தே பேஜட முண்ட சமேவலீ
பஸ்மோடுபித ஸர்வாக ஸ்த்ருபுண்ட்ராங்கித
மஸ்த்தகஹ
ருத்ராக்ஷ மாலாபரஞ்ஜே ருத்ர ஜப்ய பாராயஹ"

என்று கூறியிருப்பதால் "ஸ்ரீமன் நாராயணன் சிவஸ்துதி செய்பவனாகவும், சிவ சின்னமான விபூதியை மூன்று பட்டைக் கோடுகளாக நெற்றியில் தரித்தவராகவும், ருத்ரனுடைய கண்ணுக்குச் சமமானதாகவுள்ள ருத்ராக்ஷ மணி மாலையை அணிந்தவராகவும் இருக்கிறார்" என்பது தெளிவாகிறது.

இனி இராமாயண சுலோகத்தில்:

"த்யாத்வா ரகுபதிம் க்ருத்தம் காலாநலமிவாபரம்
பீதக்ருஷ்ணஜிநதரம் பஸ்மோத்தூளித விக்ரஹம்"

என்று கூறியிருப்பதால், "கரியமேகம்போன்ற நிறமுடைய சரீரத்தில் மஞ்சள் நிறமுடைய மான்தோலைத் தரித்தும், சரீரம் முழுதும் விபூதி தரித்தும் இருக்கும் ஸ்ரீரகுபதியான ராமச்சந்திரனைத் தியானிக்கிறேன்" என்பது தெளிவாகிறது.

அடுத்து அத்யாத்ம ராமாயண சுலோகத்தில்:

''ஸ்வர்ணவர்ணஜடாபாரம் ஸாக்ஷுத்ருத்ரமிவாபரணம்
பஸ்மோத்தூளித ஸர்வாங்கம் த்ருஷ்டுவா காமசங்கதா.''

என்று கூறியிருப்பதால் ''ருத்ரனுக்கே (சிவனுக்கே) உரித்தான தங்க நிறமுடைய ஜடாபாரத்தை தரித்தவராகவும் உடல் முழுவதும் நீறு (விபூதி) தரித்தவராகவும் சிவனே எதிரில் வந்தான் என எண்ணத்தக்கவராகவும் உள்ள (ராமனைக்கண்டு வசமிழந்தனர்)மோகமடைந்தனர்''என்பது தெளிவாகிறது.

அடுத்ததாக பிரம்மாண்ட புராண சுலோகத்தில்

''க்ருஷ்ணுஜிநேத்தரீயாம் சோததஹருத்ராக்ஷ மாலிகாம்
தண்டவானுஜடிலோ வேதானுத்திரனு பஸ்மகுண்டிதஹ''

என்று கூறியிருப்பதால் ''சிவனுக்குரித்தான மான்தோலையும் ருத்ராக்ஷ மாலையையும் விபூதியையும் தரித்து, கையில் தண்டத்தை எடுத்துக் கொண்டு குறுகிய உருவம் தாங்கி விஷ்ணுவானவர் வாமனனுக வேதத்தை ஓதுபவராக வந்தார்'' என்பது தெளிவாகிறது.

## 41. உருத்திராக்ஷத்தின் மகிமை.

உருத்திராக்ஷம் ஒரு முகம் கொண்டதிலிருந்து பதினறு முகங்கள் கொண்டது வரை பலவகைப்பட்டனவாயிருக்கின்றன. அது ஒரு மரத்தின் பழத்தினது கொட்டையாகும். கல், செம்பு, முதலியவற்றில் இருக்கிற விசேஷ சக்திகள் போன்று உருத்திராக்ஷ மணிகளிலும் இருக்கின்றன.

1. நன்ருக விளைந்த உருத்திராக்ஷ மணியும், பத்தரை மாத்துத் தங்கமும் உரைகல்லில் உரைக்க இரண்டும் ஒரே மாத்தாக இருப்பதைக் காணலாம்.

2. உருத்திராக்ஷத்தை முலைப்பாலில் உரைத்துக் கொடுக்க, தாகம், கோழை, திரிதோஷம், விக்கல், பித்தம் தீரும். அதனுலேயே தேவாரம் ஓதுகின்ற ஓதுவாமூர்த்திகளும், பிறரும் தொண்டையில் கோழை வந்தடையாமல், அவர்களது சப்தம் சுத்தமாக இருப்பதற்காக, பெரிய உருத்திராக்ஷம் ஒன்றைக் கண்டத்தில் படும்படியாக அணிந்துகொள்ளுகிற நியதி ஏற்பட்டிருக்கிறது. இப்பொழுது சட்டை போட்டுப் பித்தான் மாட்டிக்கொள்வதற்கு அது சிறிது இடையூருக இருக்கிறது என்று கொஞ்சம் தாழ்த்தித் தொங்கவிட்டுக்கொள்ளுகிருர்கள்.

3. விளைந்த ஒரு உருத்திராக்ஷத்தை, மேடுபள்ளமில்லாத ஒரு தரையிலோ, கல்லின் மேலோ வைத்து, உருத்திராக்ஷத்தைத் தொடாமல் அதற்குமேல் ஒரு செப்புத் தகட்டை அல்லது செம்புக் காசைப் பிடித்தால், அந்த உருத்திராக்ஷம் வலப்புறமாக ஓரளவு சுற்றுவதைக் காணலாம். அதிலிருந்து காந்த சக்தி வாய்ந்த உலோகம் போன்ற ஒரு வகைத் தன்மை அதற்கு இருக்கிறது என்பது புலனுகும்.

4. பெரிய உருத்திராக்ஷம் அணிந்திருப்பவர்களைப் பாம்பு தீண்டுவதில்லை. உருத்திராக்ஷத்தைக் கண்டால் பாம்பு தனது படத்தை வேறு பக்கம் திருப்பிக்கொள்ளும். அதனுலேயே காடுகளிலும் குகைகளிலும் வசிக்கின்ற

சந்நியாசிகள் பெரிய உருத்திராக்ஷ மாலையைக் கழுத்தில் சதாவும் அணிந்து கொள்ளுகிற நியதி ஏற்பட்டிருக்கிறது.

5. உருத்திராக்ஷத்தை, உருத்திரனுடைய கண்களின் துளிகளாகக் கருதி, மேலுலகத்திலுள்ளவர்கள் அணிந்து சிவபூஜை செய்கின்றதாகவும், 1008 சிறு மணிகள் கொண்ட மாலையை அணிந்த எவரையும், ஸ்ரீகண்டருத்திரராகவே பாவித்து வணங்க வேண்டுமென்பதாகவும், சாஸ்திரங்கள் அறிவிப்பதுபோலவே ஆவி உலகத்தவர்களும் கூறுகிறார்கள்.

## 42. ஆலயங்களில் காவி அடித்தல்.

தென்னாட்டுக் கோயில்களிலும் வீடுகளிலும், காவியடிப்பதின் முக்கிய நோக்கம் அவ்வவ்விடங்களிலுள்ள, விஷக் கிருமிகளைப் போக்கி, ஒருவரது தொத்து நோய் பிறருக்குப் பரவாமல் காத்துத் தூய்மையடையச் செய்வதேயாகும். ஏதாவது விஷப் பொருட்களைச் சாப்பிட்டு, குடல் வெந்து வீங்கிவிட்டாலும், அக்கி என்ற படரும் நோய் ஏற்பட்டாலும், அதற்குப் பரிகாரம் காவியைத் தவிர வேறு ஒன்றும் கிடையாது. அதனால்தான் காடுகளிலும், மலைகளிலும், மரத்தடிகளிலும் வசிக்கின்ற துறவிகள், காவியாடை தரித்துக்கொள்ளுகிற நியதியும், கோயில்களிலும் வீடுகளிலும் காவியடிக்கிற நியதியும் ஏற்பட்டிருக்கின்றன.

## 43. வில்வத்தாலும், துளசியாலும், குங்குமத்தாலும் அர்ச்சித்தலும், அவற்றைப் பயன்படுத்துதலும்.

வில்வம்-துளசி என்ற இரண்டில், வில்வத்தில் சரீரத்திற்குத் தங்க நிறம் கொடுக்கின்ற தங்கச் சத்தும், துளசி

யில் சரீரத்திலுள்ள சகல விஷக் கிருமிகளையும் கொன்று, இரத்த சுத்தி செய்கின்ற விசேஷ சத்தும் இருக்கின்றன. கர்ப்ப ஸ்திரீகள் தினமும் சிறிது வில்வ இலைகளைச் சாப்பிட்டுவந்தால், குழந்தைகள் தாயை விட நல்ல நிறமுள்ளதாக பிறக்க ஏதுவாகும். இரத்த சுத்தி வேண்டியவர்கள், தினமும் சிறிது துளசியைச் சாப்பிட்டுவந்தால் இரத்த சுத்தியும், பெண்களுக்குக் கர்ப்ப சுத்தியும் ஏற்பட ஏதுவாகும். நெற்றியில் குங்குமத்தால் அல்லது குங்குமத்தாலும் சந்தனத்தாலும் பொட்டுப் போட்டுக்கொண்டால், கண் திருஷ்டியால் ஏற்படுகிற பலவிதத் துன்பங்களையும் நீக்கி, முகவசீகரத்தையும் கொடுக்கும்.

சிவ பெருமானை வில்வத்தாலும், மகா விஷ்ணுவைத் துளசியாலும், அம்பாளைக் குங்குமத்தாலும் அர்ச்சிப்பதை யாவரும் அறிவர். வில்வம் மூன்று மூன்று இலைகள் கொண்டதாக, சிவபெருமானது முக்கண்களையும், முத்தொழில்களையும், திரிசூலத்தையும் நினைவூட்டுவதுமல்லாமல், குளிர்ச்சியைக் கொடுக்கின்ற ஒரு சிறந்த வஸ்துவாகவும் இருக்கிறது. துளசி மகாலக்ஷ்மியின் அம்சமாகவும், சூட்டைக் கொடுக்கின்ற ஒரு சிறந்த வஸ்துவாகவும் இருக்கிறது. அதனாலேயே நெருப்பிற்கு அதிபதியான சிவத்திற்கு வில்வத்தாலும், நீருக்கு அதிபதியான விஷ்ணுவிற்குத் துளசியாலும் அர்ச்சிக்கப்படுகிறது. அம்பாளுக்கு மஞ்சளால் தயார் செய்யப் பெறும் குங்குமத்தால் அர்ச்சிப்பதன் காரணமும், அதற்கு விஷக் கிருமிகளைக் கொல்லக்கூடிய ஆற்றலும், திரேகத்திற்குப் பளபளப்பும், நிறமும் கொடுக்கின்ற விசேஷ ஆற்றலும் இருப்பதாலுமேயாகும்.

இவற்றிலிருந்து இந்துக்களது ஆசாரங்களும், அனுஷ்டானங்களும், வழிபாடுகளும், தத்துவக் கருத்துக்கள்

நிறைந்தனவாகவும், சுகாதார அடிப்படையில் அமைந்தன வாகவும், தெய்வீகப்பண்பாட்டை மக்களது உள்ளங் களிலே உண்டுபண்ணக்கூடியதாகவும் ஏற்படுத்தப் பெற்றி ருக்கின்றன என்பது தெளிவாகும்.

44. பிரார்த்திப்பவர்களது குறைகளை, தெய்வம் தனது பெயர் தாங்கின மனிதர் மூலம் நிவர்த்தித்து வரும் பேருண்மை.

நாம் செய்கின்ற பிரார்த்தனைகளை, வழிபடுகின்ற அம் மூர்த்திகள் கேட்டு, அவற்றிற்கு வேண்டிய அனுக்கிரகங் களை எப்பொழுதும் செய்து வருகிறார்கள் என்ற உண் மையை, பிரார்த்தனையே செய்யாதவர்களும், அதன் மூலம் அனுக்கிரகம் பெருதவர்களும் எவ்வாறு அறிய முடியும்? இப்பொழுதுள்ள அனுபூதிமான்கள் சொல்லிவருவதையும், முன்னுள்ளவர்கள் அருளியிருப்பதையும் சிரமேற்கொண்டு தானும், அவ்விதம் நடந்து பார்த்தால்தானே அதனுடைய பலாபலன் தன் சொந்த அனுபவத்திற்கு வரக் கூடியதா கும். தன் அனுபவத்திற்கு வந்த ஒன்றையே பிறருக்கு வலியுறுத்திக் கூறவும் முடியும். இது சம்பந்தமாக எங்க ளுடைய சொந்த அனுபவமும், பிறருடைய அனுபவமும், ஆன்றோர் துணிபும் ஒன்றுபோல் காணப்படுகின்றன. அது என்னவென்றால், யார் யார் எந்த எந்த தெய்வத்தி னிடத்தில், உள்ளம் உருகி வழிபாடு செய்து, தம் தம் குறைகளைச் சொல்லிப் பிரார்த்தனை செய்கிறார்களோ, அவர்களது கண்களுக்குத் தோன்றாது மறைந்து நிற்கும் அந்தந்தத் தெய்வம், தனது பெயர் தாங்கின அடியவர் களைக் கொண்டு, பிரார்த்தனை செய்தவர்களுக்குத் தோன் றும் துணையாக நின்று, அவர்களது குறைகளைத் தீர்த்து

வருவதேயாகும். அதனுலேயே "தேவா மனுஷ்ய ருபேணும்" என்று அனுபூதிமான்கள் சொல்கிருர்கள். நாம் வணங்கும் மூர்த்தியின் பெயரும், நமக்கு வந்து உபகரித்த அன்பரின் பெயரும், ஒன்ருக இருப்பதைத் அனுபவத்தில் கண்டு கொள்ளலாம். நம்முடைய வணக்கத்தையும், பிரார்த்தனையையும் ஏற்றுக் கொண்ட அம்மூர்த்தி, தனது பெயர் தாங்கின அடியவர்களில், தகுதியுடைய ஒருவர் மனதில் புகுந்து, அவரது மனதை வழிபட்டவரிடம் ஈடுபடும்படி செய்து, அவருக்கு வேண்டிய உதவிகளைப் புரியுமாறு அவரைத் தூண்டி விட்டு, வணங்கிய பக்தனின் துயரைக் களைந்து, அன்றும் இன்றும் என்றும் அனுக்கிரகித்துத் திருவருள் பாலித்து வருவது, யாவரும் அனுபவத்தில் கண்டு ஆனந்திக்க வேண்டிய அரியதோர் பேருண்மையாகும்.

45. பலதெய்வ வழிபாட்டிலும், பலன் தருகின்ற பரம் பொருளாகிய ஆண்டவன் ஒருவனே.

ஆகவே இந்துக்கள் வழிபடுகின்ற விக்ரகங்கள், மேலுலகங்களில் அன்றும் இன்றும் என்றும் இருந்து நம்மை ஆண்டு வருகின்ற ஆண்டவனுல், துஷ்ட நிக்ரகத்திற்கும், சிஷ்ட பரிபாலனத்திற்கும், தானுகவே எடுத்துக் கொண்ட பலவிதமான திருமேனிகளாகும் என்று உணர்ந்து, யார் யார் எந்த எந்த உருவத்தில் வழிபட்டாலும், பலன் தருகிறவன், அவ்வுருவங்களெல்லாம் எடுப்பதற்குக் காரண கர்த்தாவான ஒருவனே என்றும், சந்தேக விபரீதமின்றித் தெளிந்து கொள்ளல் வேண்டும். அதனுலேயே,

"மனமது நினைய வாக்கு வழுத்த மந்திரங்கள் சொல்ல
இனமலர் கையில் கொண்டு அங்கு இச்சித்த
தெய்வம் போற்றிச்

சினமுதல் அகற்றிவாழும் செயல் அறமானுல்
யார்க்கும்
முனமொரு தெய்வம் எங்கும் செயற்கு முன்னிலை
யாம் அன்றே'' என்றும்,

''யாதொரு தெய்வங் கொண்டீர் அத்தெய்வமாகி
ஆங்கே
மாதொரு பாகனுர்தாம் வருவர் மற்றத் தெய்வங்கள்
வேதனைப்படும் இறக்கும் பிறக்கும் மேல்வினையும்
செய்யும்
ஆதலால் இவையிலாதான் அறிந்து அருள் செய்வன்
அன்றே''

என்றும் நமது சாஸ்திரங்கள் சொல்லுகின்றன. அந்தக் காரணகர்த்தாவும், நம் கண்களுக்குத் தெரியாமல் வாழ்ந்து வருகின்ற இறந்தவர்களை ஆண்டு வருவதற்கும், விண்ணுலகிலுள்ளவர்களை ஆண்டு வருவதற்கும், நம்முடைய கண்களுக்குத் தெரியாத அருள் உருவங்கள் கொண்டுதானே செய்யக் கூடியதாகும் என்பதையும் உணர்ந்து கொள்ளுதல் வேண்டும்.

ஆதலால் விக்ரக ஆராதனையைப் பற்றிய உண்மைகளை அறியாதவர்கள், இனியாவது ஆராய்ந்துணர்ந்து, இந்துக்கள் வழிபட்டுவரும் விக்ரகங்களைப் பற்றி, பழிப்பதனுல் ஏற்படும் பாவத்திற்கும் பழிக்கும், தங்களைப் பாத்தியப் படுத்திக் கொள்ளாமல் பாதுகாத்து பக்தசீலர்களாகத் திகழ்ந்து, மெய்யுணர்வும் திருவருளும் குருவருளும் பெற்று உய்வார்களாக.

---

*வீ. சுப்புராயலு நாயுடு பிரஸ், மதுரை:—59.*